

# அருட்சட்ட வழிபாட்டு முறை


தொகுத்தவர்:

பாலகவி. வேங்கடராமன்



தம் அறுபதாண்டு நிறைவு மணிவிழா

நினைவாக வெளியிடுவோர்:

'ஓவியமணி'

திரு. T. B. சக்கரபாணி செட்டியார்

8, கென்னடி இரண்டாம் தெரு, மயிலை, சென்னை-4.

அருளுருவம் தாங்கி, அகிலத்தைக் காக்கும் அண்ணலே! பொய்யான என் உள்ளத்தில் தோன்றும் பொய்யான எண்ணங்களை எல்லாம் நீக்கி, மெய்யாக உன்னடியை விரும்பும் மெய்யான எண்ணத்தைத்தருவீர்!

பேருக்காகவும், புகழுக்காகவும் எந்தச் செயலையும் அடியேன் செய்யாமல், உமது அருளைப் பருகும் தாகமுற்று ஏங்குவேனாக!

நும் அடியார்களுக்குத் தொண்டு செய்யும் சிறந்த பணியை இவ்வடிமைக்கு அருள் வீராக! இவ்அவனிமேல் நும்புகழ் ஓங்க அணுவளவாவது இவ்வடிமை பயன்படுவேனாக!

இறைவா! இறைவா! இறைவா!



ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் துணை

# அருட்சட்ட வழிபாட்டு முறை




தொகுத்தவர்:

**பாலகவி. வேங்கடராமன்**



தம் அறுபதாண்டு நிறைவு மணிவிழா நினைவாக

வெளியிடுவோர்:

**திரு. ஓவியமணி. T. B. சக்கரபாணி செட்டியார்**

**எண். 8, கென்னடி இரண்டாம் தெரு, மயிலை,**

**சென்னை-4.**


---



---


26—9—1980 விலை. **3-00**

# உள்ளுறை


| | பொருள் | பக்கம் |
|---|---|---|
| 1. | அருட்சக்தி அன்னையார் ஆசியுரை ... | 1 |
| 2. | அறுபதாண்டு வாழ்த்து ... | 2 |
| 3. | முன்னுரை ... | 4 |
| 4. | குருநாதர் வரலாறும், சட்டமும். ... | 5 |
| 5. | திருப்பள்ளி யெழுச்சி ... | 13 |
| 6. | திருமஞ்சனம் ... | 16 |
| 7. | அர்ச்சனை ... | 21 |
| 8. | ஆராதனை ... | 38 |
| 9. | துதிப்பாடல்கள் ... | 39 |
| 10. | பிரார்த்தனை-1, 2. ... | 47 |
| 11. | அருட்கொடிப்பாடல் ... | 48 |
| 12. | வாழ்த்து ... | 49 |
| 13. | திருப்பல்லாண்டு ... | 50 |
| 14. | திருவடிப்புகழ்ச்சி ... | 50 |
| 15. | மங்களம்-1. ... | 51 |
| 16. | பிரார்த்தனை-3. ... | 52 |
| 17. | சத்குரு நாமாவளி ... | 53 |
| 18. | அருட்சட்டம் ஏற்றுக்கொள்ளும் முறை | 57 |
| 19. | குருநாதர் வழிபாடு ... | 59 |
| 20. | கொலு அமர்த்துதல் ... | 59 |
| 21. | ஸஹஸ்ர நாம அர்ச்சனை ... | 62 |
| 22. | லக்ஷார்ச்சனை ... | 62 |
| 23. | இரெட்டியப்பட்டித் திருத்தலம் ... | 65 |
| 24. | அடியார் உறவு ... | 66 |
| 25. | கோடி அர்ச்சனை ... | 68 |
| 26. | " பாடல் ... | 71 |
| 27. | மங்களம்-2 ... | 74 |



ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள்



ஸ்ரீலஸ்ரீ அருட் சக்தி அன்னையார்



ஓம் ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் துணை

சற்குருநாதர் ஸ்ரீஇரெட்டியப்பட்டி சுவாமிகளின்
அருட்சட்ட நெறியை அவனியில் பரப்பி
அருளாட்சி செய்து வரும்
உயர்தவத்திரு அருட்சக்தித் தாய் அவர்களின்

# ஆசியுரை

திருவார்திரு இரெட்டியப்பட்டி சுவாமிகளின் அருட்சட்டம் ஏற்று நடக்கும் அடியார்களுக்கு, நித்திய வழிபாட்டிற்கான அம்சங்கள் தொடர்பாக இதில் அமைந்துள்ளன.

அடியார்களுக்கு இந்நூல் பெரிதும் உதவியாக இருக்கும்

இந்நூலை 'ஓவியமணி' திரு **T. B.** சக்கரபாணி செட்டியார் அவர்கள் தம் அறுபதாண்டு நிறைவு மணிவிழா நினைவாக வெளியிடுகிறார்.

அருட்சட்ட அடியார்கள். அன்பர்கள் பலரும் இந்நூலைப் பயன்படுத்தி வழிபாடு செய்து, அருள்மிகப் பெற்று, இம்மை மறுமை இன்பங்கள் அடைந்து உய்ய, எல்லாம் வல்ல ஆண்டவர் அருள் புரிவாராக.

பிள்ளையார்குப்பம்.
(வழி) பாகூர்,
கடலூர்-1.
3—8—1980

திருவருள் துணை

ஸ்ரீ அருள்சக்தி தாய்



'செந்தமிழ் விளக்க வள்ளலார்' 'ஆட்சிச் சொற்காவலர்' 'சாந்த சீலர்'

அருட்பெருந்திரு. கீ. இராமலிங்கனார் எம்.ஏ.,

அவர்கள் அருளிய

# அறுபதாண்டு வாழ்த்து

திருவருட்சீலரும், திரு. இரெட்டியப்பட்டி அடிகளார் அருட்சட்ட நெறியில் நிலைநின்று நிலவுபவரும், அடிகளாருக்கு கோடி அர்ச்சனை செய்வதில், முன்நின்று, அடியவர்கள் பலரையும் ஒன்று திரட்டி, அவர்கள் அன்பின் கூட்டுறவையும் கொண்டு, மிகச் சிறப்பான முறையில் அவ்வர்ச்சனையை நடத்தி நிறைவுறுத்தியவருமான, 'ஓவியமணி' திரு. தி. பா. சக்கரபாணி செட்டியார் அவர்கள் அறுபதாண்டு நிறையப் பெற்றுள்ளார்கள்.

இந்நிறைவுச் சிறப்பை அருள்பெருக்கும் விழாவாகக் கொண்டாடக் கருதி, குருநாதர் சந்நிதியில் தனிப்பெரு வழிபாட்டிற்கு ஏற்பாடு செய்திருப்பதுடன், குருதேவர் அருளியுள்ள 'அருட்சட்ட வழிபாட்டுமுறை' என்னும் மேன்மை மிக்க நூலை வெளியிடுகிறார்கள். குருபரரின் சட்ட நெறியை ஏற்கும் பேறு பெறுகிறவர்கள் பின்பற்றி ஒழுக வேண்டிய முறைகளை வரிசைப்படுத்தி வகுக்கும் அருள்நூலே இந்தத் திருநூலாகும். அறுபதாண்டு நிறைவு விழாவின் மணிமகுடமாக இந்நூல் அமைந்து விளங்குகிறது.

இதனை, குருபெருமானாரின் திருவருளைச் சிந்தித்து அவ் இன்னருள் இயக்கியவண்ணம் தொகுத்தும் படைத்தும் கொடுத்திருப்பவர்கள், காஞ்சி 'அருள் ஞானத்தாய்' அவர்களும், சட்டநெறிக்கு ஆகமம் ஆக்கி அளித்துள்ள-'பாலகவி' திரு. மி. கே. வேங்கட ராம செட்டியார் அவர்களும் ஆவார்கள். அவர்கள் இருவருக்கும் அடியார் உலகம் நன்றி செலுத்திக் கொள்ளக் கடமைப்பட்டுள்ளது.

இத்தகையதொரு நூல் அடியவர்களுக்கு இன்றி யமையாத ஒரு இனிய பனுவலாகும் பல அடியவர் களுக்கு வழிகாட்டும் வளமையுடையதாகும். முறை யாகச் சட்டம் ஏற்கவும், கொலு அமர்த்தவும், அன்றாடப் பூசனையைப் புளகாங்கிதம் பெறப்புரியவும் பெரிதும் பயன்படும் பாங்கான நூலாகும்.

தம் மணிவிழாவில் திரு. தி. பா. சக்கரபாணி செட்டியார் அவர்களும், அவர்தம் வாழ்வரசியார், திருமதி. சாந்தகுமாரி அம்மையார் அவர்களும் இத்திருவருள் நூலை வெளியிட முன்வந்ததற்கு பண்பு மிக்க பல்லாயிர அடியவர்களும் பெரிதும் கடமை பூண்டவர்களாகின்றனர். நீடுநிலவுக இத்தம்பதியரின் அருள் மனமும் திருப்பணியும்! இவர்கள் குடும்பத் தினர் அனைவரும் அவ்அருள் மனமும் பணியும் பூண்ட வர்களாய்ப் பலநலங்கள் வளங்களுடன் பல்லாண்டு வாழ்க!

'தமிழ்மணம்'
சென்னை-30.

**கீ. இராமலிங்கர்,**
7—8—1980.



# முன்னுரை

அருள் வடிவாம் குருநாதர் ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகளின் அருட்சட்டம் பேணும் அடியார்கள் அன்றுடம் வழிபாட்டில் ஓதும் பாடல்கள் பல நூல்களில் பலஇடங்களில் உள்ளன. அவற்றை முறையாகத் தொகுத்து, அச்சிட்டு வெளியிட வேண்டும் என்ற எண்ணம் அடியவர் பலரிடை வெகுநாளாக இருந்து வந்தது.

இதனைச் செயல் முறையில் நிறைவேற்றும் பொறுப்பை சென்னை ஓவியமணி திரு. தி. பா. சக்கரபாணி செட்டியார் அவர்களும், அவர் தம் வாழ்வரசியார் திருமதி. சாந்தகுமாரி அம்மையார் அவர்களும் ஏற்றுக்கொண்டனர். அவர்களுக்கு என் நன்றி உரியது-

அபிடேக முறை முதலிய பல பொருள்களை ஆண்டவர் அருள் துணைகொண்டு உதவியருளிய காஞ்சிபுரம் திருவார் திரு. அருள்ஞானச் செல்வத் தாய் அவர்களுக்கும் என் நன்றி உரியதாகும்.

அருட்சட்ட அடியார்கள், அன்பர்கள் அனைவரும் இந்நூலைப் பயன்படுத்தி, அன்பு வழிபாடாற்றி ஆண்டவரின் அருட்செல்வம் பெற்றுய்யக் கோருகிறேன்.

ஆண்டவர் அருள்
**பாலகவி. வேங்கடராமன்**



ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் துணை
குருவே பிரமன், குருவே திருமால்,
குருவே பரமன், குருதாள் போற்றி.

# குருநாதர் வரலாறும் சட்டமும்

உலகம் தோன்றிய நாள் முதல் உலகின் பல பாகங்களிலும், பல காலங்களிலும் அருளாளர் பலர் தோன்றி அருள் நெறி கண்டு இன்பம் அடைந்துள்ளனர். தாம் பெற்ற பேரின்பத்தைப் பலரும் பெறவேண்டும் எனக் கருதியுள்ளனர்; முயன்றுள்ளனர்; தம் சிறந்த கருத்துக்களை எழுதி வைத்தும் சென்றுள்ளனர், அவர்கள் அனைவரின் கருத்தும் செயல் முறையில் நிறைவேற, எல்லாம் வல்ல பரம் பொருளின் அருட்பெருங்கருணையே ஒருருத் தாங்கி உலகின்கண் அவதரித்ததைப் போன்று, செந்தமிழ் நாட்டில், திருநெல்வேலி மாவட்டத்தில் கோவில் பட்டிக்கு 28 மைல் தொலைவில் உள்ள நாகலாபுரத்தை அடுத்துள்ள இரெட்டியப்பட்டி என வழங்கும் இருடியர்பட்டித் திருத்தலத்தில் கி. பி. 1856-ல் நள ஆண்டு புரட்டாசி மாதம் இரேவதி நன்னாளில் சைவ வேளாள மரபில் சுவாமிகள் 'சுப்ரமண்யம்' என்ற பிள்ளையாகத் தோன்றியருளினார்கள். ஆங்கிருந்த ஒரு திண்ணைப் பள்ளிக்கூடத்தில் எழுதப்படிக்கக் கற்றுக்கொண்டனர். குலத்தொழிலாகிய விவசாயத்தில் ஈடுபட்டனர். நிலம் பன்மடங்கு விளைவைத் தந்தது. அத்தருணம் அவ்வூர் ஏழை மக்கள் அன்றுட வாழ்க்கைக்குத் தேவையான பொருள்களை அதிக விலை கொடுத்து வாங்குவதைக் கண்டு வருந்தி, தூத்துக்குடிக்கு வண்டி கட்டிச்சென்று சரக்குகள் வாங்கி வந்து, கொள்விலைக்கே விற்று ஏழை மக்கட்கு உதவினர். இவர் செயல் வீட்டில் உள்ளார்க்கு வருத்தம் தந்தது. இவர் மதுரைக்குச் சென்று ஒரு முகம்மதியர் கடையில் கணக்குப் பிள்ளையாய் அமர்ந்தனர்.

நாள்தோறும் விடியல் மூன்று மணிக்கு எழுந்து வைகைநதிக்கேகி, 4 மணிக்குள் நீராடி, முன்னவனுர் வழிபாடு செய்து வந்தனர். சர்வஜித்து ஆண்டிலே ஒரு நாள் வழக்கம்போல் நீராடி முடிந்ததும், ஒரு சிறந்த அருட்ஜோதி கண்டு அருகே செல்கையில் அது ஒரு விநாயகர் போன்று ஜொலிக்க, சுவாமிகள் ஆனந்த பாஷ்பம் சொரியச் சொல்லொணுப் பெரு மகிழ்வுடன் ஆலிங்கனம் செய்து கொண்டபோது, அது ஒரு விநாயகர் சிலையாக மாறியதைக் கண்டு, பேரானந்த முற்று, அம்மூர்த்தியை எடுத்து, ஒரு மேடைமீது அமர்த்திப் '**பரிபூரண விநாயகர்**' எனத் திருநாமம் சூட்டி, நீராட்டி மலர் சூட்டி, தாபதீபம் காட்டி, நைவேத்தியம் செய்து வழிபாடு ஆற்றினர். அன்பர்கள் பலரும் இந்த அருட்செய்தி அறிந்து. அம்மூர்த்திக்கு ஒரு *திருக்கோயில் அமைத்தனர். சுவாமிகள் நாள்தோறும் அம்மூர்த்திக்கு வழிபாடு ஆற்றி வந்தனர். அன்பர்கள் கூட்டம் நிறைய வந்து, கோரிய பயன்களைப் பெற்றும், குறைகள் பல நீங்கப் பெற்றும், நிறை நலம் பல ஓங்கப் பெற்றும், கை மேல் பலன் கண்டு களிமிகக் கொண்டு வழிபடலாயினர்.

சுவாமிகள் பின்னர் வியாபார நிமித்தம் கடைக்கு உரியவர்களின் கருத்தின்படி சில காலம் பம்பாய் சென்று தங்க நேர்ந்தது. அங்கும் தம் தினசரி ஒழுக்கத்தை முறையுடன் போற்றி வந்தனர். அங்கிருந்து திரும்புகையில் வட இந்தியாவிலும், சென்னை மாநகர் போன்ற நகரங்களிலும் உள்ள கிறிஸ்துவப் பாதிரியார்களுடனும் அரசாங்க அலுவலர்களுடனும் அளவளாவ நேர்ந்தபோது, கிறிஸ்துவ சமய உண்மைகளையும், கொள்கைகளையும், அரசாங்க சட்ட அமைப்புகளையும் உணர நேர்ந்தது. ஏற்கனவே

*இத்திருக்கோயில் மதுரை மாநகரில், வைகை நதியின் தென் கரையில், ரயில் வண்டி செல்லும் பாலத்திற்கு மேற்கில் கிழக்கு நோக்கியதாக அமைந்துள்ளது. நித்திய பூஜை நடந்து வருகிறது.

கடைக்கு உரியவர்களோடு தொடர்பு கொண்டிருந்த தால், இந்துஸ்தானி மொழித்திறமையும், இஸ்லாம் மதத்தின் கொள்கைகள், குரானில் உள்ள சிறந்த உண்மைகள், உயர்ந்த கருத்துக்கள் முதலியனவும் அவர்கள் உள்ளத்தே அமைந்திருந்தன. எல்லா மதங் களின் சிறந்த உண்மைகளும், உயர்ந்த கருத்துக்களும் முடிவாக ஒரே பேருண்மையை விளக்கும் அற்புதம் அறிந்து, அனைத்துயிரும் இப்பேருண்மையைக் கடைப் பிடித்துப் பேரின்பமடைய எளிய வழியொன்று இருத்தல் வேண்டும் என அவரது திருவுள்ளம் எண்ணியவாறே இருந்தது.

வட நாட்டிலிருந்து மதுரை திரும்பிய சுவாமிகள் வைகை நதியில் நீராடி வழக்கம்போல் வழிபாடு தொடங்கியது கண்ட அன்பர்கள் ஆனந்தமுற்றுக் கூடலாயினர். அடியவர் கூட்டம் பெருகி வந்தது. ஆனால் சுவாமிகள் அகமுகநோக்கில் அதிகமாக ஈடுபட லானார்கள். ஒரு நாள் வழக்கம்போல் கடையில் நிட்டையில் அமர்ந்த சுவாமிகள் சில நாட்கள் எழுந் திருக்கவே இல்லை. ஒரு நாள் எழுந்து குற்றாலம் சேர்ந்து, சண்பகமாதேவி அருவிக்கருகில் உள்ள ஒரு குகையுட் சென்று நிட்டையில் ஆழ்ந்தனர். பொதிகை மாமலையில் பல ஆண்டுகள் கடுந்தவம் புரிந்து பிறவிப் பெரும் பயன் பெற்றனர். தாம் பெற்ற பேரின்பத்தை எல்லா நாட்டினரும், எல்லா மொழியினரும், எல்லா இனத்தவரும், எக்காலத்திலும் எவ்விதத் தடையு மின்றி, எவ்வித வேறுபாடுமின்றி, எளிய முறையில் பெற்றுய்ய வேண்டும் என்ற பெருங்கருணையுடன் 'சட்டம்' என்ற ஒரு சிறந்த செந்நெறியை வகுத்தருளினர்.

சட்டத்தின் சிறப்பான கொள்கைகளின் சுருக்கம் வருமாறு:-

1, ஒவ்வொரு நாளும் விடியற்காலை 4 மணிக்கு மேல் 5 மணிக்குள் பச்சை நீரில் முழுகவேண்டும்; தலை யும் நனைய நீராடவேண்டும்.

2. குடிக்கவோ, குளிக்கவோ, எக்காரணம் கொண்டும் வெந்நீரைப் பயன்படுத்தலாகாது.

3. நீராடி முடிந்ததும், விநாயகர் கோவிலுக்குச் சென்று மும்முறை வலம் வந்து, மனமுருகி வழிபட்டு வணங்க வேண்டும். [எந்த மதத்தினராயினும், தத்தமக்குரிய வழக்கப்படி வழிபாடு செய்யலாம்.] தண்ணீரில் திருநீறும் துளசியும் இட்டு உள்ளுக்குப் பருக வேண்டும்.

4. உலகெலாம் படைத்துக் காக்கும் ஒரு பரம் பொருளைப் பல மதத்தினர் பல உருவங்களில் வழி பட்டுப் பயனடைகின்றனர்; ஆனால் பரம்பொருள் ஒருவரே என்ற தீர்மானமான எண்ணம் கொள்ள வேண்டும். எந்த மதத்தினையும் நிந்தித்தல் கூடாது.

5. புலாலுண்ணல், பொய் பேசல், கள் குடித்தல், சூதாடுதல், திருடுதல், புகைபிடித்தல், புகையிலை முதலிய லாகிரி வஸ்துக்களைப் பயன்படுத்துதல், பொல்லாரோடு உறவாடுதல் முதலியன செய்தல் ஆகாது.

6. எந்நோய் வரினும், எத்துயர் வரினும், எத்தகைய சிக்கல் ஏற்படினும், ஒரு மருத்துவரையோ, ஒரு மனிதரையோ தஞ்சம் என்று அடையாது, எல்லாம் வல்ல இறைவனையே தஞ்சம் எனப் பற்றி, உறுதியாக நின்று, உயர்பயன் பெறுதல் வேண்டும்.

7. நோயுற்ற காலை இருவேளை பச்சை நீரில் முழுகித் திருநீறு பூசி, திருநீறும் துளசியும் இட்ட தீர்த்தம் அருந்தி, மனமுருகி இறையருளை நாடி, அவனருள் துணையால் நோய் நீக்கம் பெற்றுப் பயனடையவேண்டும். விஷக்கடி, வெட்டு ரணம், பிரஸவம் முதலிய எதற்கும் மருத்துவம் நாடாது, திருநீறு. தீர்த்தம் கொண்டே அருட்பயன் காண வேண்டும்.

8. வைத்தியம், ஜோதிடம், மாந்திரீகம் இவைகளை நம்பி ஏமாறுமல், மருந்து, மணி, மந்த்ரம் முதலியன மருவாமல், 'எல்லாம் வல்ல கடவுளே கதி' என்ற பரிபூர்ண நம்பிக்கையோடு, தளராத நெஞ்சத்துடன், இறைவனருள் நாடி அருளாற்றலால் அனைத்து இடுக்கண்களையும் வென்று நற்பயன் பெறுதல் வேண்டும்.

9. இந்தத் தீது அகன்றால், இந்த நன்மை கைகூடினால் இன்னது செய்கிறேன் என்று தெய்வத்திற்குப் பிரார்த்தனை செய்து கொள்ளும் பழக்கத்தைக் கைவிடுதல் வேண்டும்.

10. வெள்ளிக்கிழமை தோறும் ஒரு வேளையாவது உணவைக் குறைத்துக் கொண்டு, விரதம் இருந்து பயில வேண்டும்.

11. எப்போதும் ஆண்டவர் திருநாமத்தை மனனம் செய்தவண்ணம், உடல், பொருள், ஆவி அனைத்தையும் உடையவனிடம் ஒப்படைத்து, அச்சமும், பற்றும் அணுவளவும் இன்றி, அருள் வாழ்வு வாழப் பழகுதல் வேண்டும்.

12. தினந்தோறும் ஆண்டவர் அருளை வேண்டி, எந்தப் பிற எண்ணமும் இன்றி. அமைதியாக அமர்ந்து அருள் நிட்டை பேணி, ஆனந்தம் எய்தப் பழக வேண்டும்.

13. சட்ட அனுட்டானத்தில் உள்ளவர்களில் யாருக்காவது உலகில் உலாவும் காலம் முடிந்து உயிர் அடக்கமாக நேர்ந்தால், அதற்காக வருந்தாது அவர்களின் உடலை எரிக்காது, மண் மறைவு (சமாதி) செய்தல் வேண்டும்.

14. உலக விவகாரங்களில் சிக்கல்கள் நேரும் போது, அறக்கடலாகிய இறைவனின் அருள் துணை

நாடி அறமுடிவைப் பெற முயல வேண்டுமேயன்றி, அறமன்றம் நாடி, விவகாரங்களை விபரீதமாக வளர்த்துக் கொள்ளுதல் கூடாது.

15. சட்ட நெறியில் ஈடுபட்டுள்ளோர் தவறி நடந்தால், அவர்கட்கு அறிவுறுத்தத் திருவருளால் உடல் உபாதி முதலிய தண்டனை ஏற்படலாம் அவர்கள் உடனே உண்மையை உணர்ந்து, தவறு புரிந்தமைக்கு மன்னித்து அருள் புரியுமாறு இறைவனை உருகி நினைந்து வேண்டிக் கொண்டால், உடனே, பரிஹாரம் ஏற்படும். ஏற்பட்ட தண்டனை நிவர்த்தி யாகும்.

16. 'வேலைக்கு ஏற்ற கூலி' என்பது போல், எந்த அளவு உறுதியும் ஊக்கமும் கொண்டு கைப்பற்று கிறோமோ, அந்த அளவிற்குக் கைமேல் பயன் கிட்டு வதையும், தூய நல்வாழ்வு அமைவதையும், இறைவன் அருள் முன்னின்று எல்லா வகைக்கும் வழிகாட்டி அழைத்துச் செல்வதையும் நாம் நன்கு உணர்ந்து அருள் துணை கொண்டு முன்னேறலாகும். நோய்நீங்கி மலங்கள் நீங்கி, உயிர்கள் கரையேற வேண்டுமானல் இந்த வாழ்வு நெறியைச் சடைப்பிடிக்க வேண்டும்.

ஆண்டவர் அருட்சட்டத்தில் ஈடுபட்டிருப்பதை யும், அதனுல் ஏற்படும் நன்மைகளையும், முன்னேற்றத் தையும் அவர் அருளால் நிகழும் அற்புதங்களையும், பெருமையாகவோ, பிறர் மெச்சிக் கொள்ளவோ, வெளியிட்டுக் கூறுதல் ஆகாது: இரகசியமாக உள்ளத்துள் வைத்துப் போற்றி உய்வு பெறுதல் வேண்டும் எனச் சுவாமிகள் அருளியுள்ளார்கள் என்பது விளங்குகிறது.*

* சுவாமிகள் வாழ்க்கை வரலாறும் அவர் உலகுக்கு வழங்கி யுள்ள சட்ட நெறியின் விவரங்களும் இன்னும் விரிவாகக் காண விரும்புவோர் 'வழிகாட்டும் வான் பொருள்' என்ற நூலிற் காணலாம். அந்நூல் சுவாமிகள் திருக்கோயிலில் கிடைக்கும்.

இவ்வாறு மிக உயர்ந்த அருட்பெரு நெறியை மாபெருங் கருணையால் உலகுக்கு வகுத்து வழங்கிய சுவாமிகள். ஆங்காங்கும் பக்குவம் பெற்ற அடியார் பலரின் இருப்பிடம் நாடிச் சென்று ஆட்கொண்டு அருள் புரிந்து அவர்களின் நல்வாழ்விற்கு அருந் துணையாய் நின்று ஊக்கிவரலானார்கள், கி. பி. 1923 ஜனவரியில், துந்துபிஷூ மார்கழிமீ 28உ வெள்ளிக் கிழமை ஏகாதசி திதி அனுட நன்னாளில் உடையவ னோடு இரண்டறக் கலந்தனர், சுவாமிகள் தரைமீது அவதரித்த அதே இடத்தில் அடக்கம் செய்யப் பெற்று, திருக்கோயில் அமைக்கப் பெற்றுள்ளது 0

உலகினர் கண்ணுக்குத் தோன்ருது மறைந் தருளிய பின்பும், சுவாமிகள் அருட்சட்ட அடியவர்க்கும் அன்பர்கட்கும் என்றென்றும் துணையா யிருந்து அருளாட்சி புரிந்துபேணி வரும் அற்புதத்தை அனைவரும் இன்றும் அறிந்து ஆனந்தமுறுவது உண்மையிலும் உண்மை.

நாட்டின் பல பாகங்களிலும் பல இனங்களைச் சார்ந்த பல ஆயிரக்கணக்கான குடும்பத்தினர் மேற்கண்ட சட்ட முறைகளைத் தமது வாழ்க்கையில் கைக்கொண்டு ஒழுகி, இம்மை மறுமை நலங்கள் அனைத்தையும் எளிதிற்பெற்று கைம்மேல் பலன்கண்டு வருவதை இன்றும் கண்கூடாகக் கண்டு, எவரும் கையாண்டு நற்பயன் பெற்றுய்யலாம் என்பதில் எள்ளளவும் ஐயமில்லை.

---

0 இத்திருக்கோயிலை விரிவாக்கும் திருப்பணி நடந்துவருகிறது

விழுப்புரம்-திருச்சி குறுக்குப் பாதையில் திருவெண்ணெய் நல்லூர் புகைவண்டி நிலையத்திற்கு அருகில் உள்ள அருள்நகரில் சுவாமிகளின் பெயரில் சங்கமும், எட்டாம் வகுப்புவரை பள்ளி யும், இலவச மாணவர் விடுதியும் உள்ளன.



## அருட்சட்ட அடியவர் மேற்கொள்ள வேண்டுவன

1. அடியார்களை ஆண்டவன் என மதித்தல்

2. எள்ளத்தனையும் பொய் பேசாதிருத்தல்

3. மறந்தும் தன் புகழை நாடாதிருத்தல்

4. எந்நேரமும் இறைவனுல் படைக்கப்பட்ட உயிர்களின் வேலைக்காரன் என எண்ணுதல்

5. சிறந்த அடியார்களின் இல்லங்கட்குச் சென்று ஆண்டவன் நம்பிக்கையைப் பலப்படுத்துதல்

6 உணவு, உடை, பொருள் ஆகிய மூன்றினும், இறைவனுல் கொடுக்கப்படுபவை தவிர, வேறு ஒன்றிலும் விருப்பம் வைக்காதிருத்தல்.

7. சதா சர்வ காலமும் இறைவனது பூஜையை மனதுள்ளே செய்துக்கொண்டிருத்தல்

8. எதற்கும் ஆண்டவன் துணை உண்டு என உறுதியாக நம்புதல்

9 'அகில லோகச் சக்கரவர்த்தியின் அடிமை நாம்' என்ற எண்ணம் எப்போதும் மாருமல் கொண்டிருத்தல்.

---

ஊமை கண்ட கனவைப் போன்று ஒரு ஆத்மா, தன் சாதகத்தால், தான் கண்ட காட்சியை யாருக்கும் எடுத்துச் சொல்லுதல் என்பது இயலாத செயல்.

# அருட்சட்ட வழிபாட்டு முறை

## திருப்பள்ளி யெழுச்சி

(உயிர் வர்க்க மாலை)

அருளறி வாகியெங் கணுநிறைந் தருள்செய்
அற்புதப் பொருளருள் துணையென வுணர்ந்தே
இருளகன் றிடவுல கினிலெலா வுயிரும்
இன்பமெய் தற்கெனத் திருநெறி வகுத்துப்
பொருளனைத் தினுமுயர் செம்பொரு ளளிக்கும்
புனிதனே மனிதனுய் இனிதுவந் தவனே
மருளறு மனத்தமர்ந் தாட்சிசெய் தருளும்
மன்னவ னேபள்ளி யெழுந்தரு ளாயே. 1

ஆணவ கன்மமா யாமலம் மூன்றும்
அடியொடு தொலைந்திடச் செய்யவல் லவனே
வீணல சங்கமும் கோழியு மொலித்தல்
விடிந்தது பொழுதருட் கதிரவன் வரவு
காணவென் றேமலர் கிறதுளக் கமலம்
காரிருள் மாயையாம் திரையகல் கிறதே
பேணிநல் லருள்புரிந் தெனையுமாட் கொண்ட
பெருந்தகை யேபள்ளி யெழுந்தரு ளாயே. 2

இனிமையாம் தமிழையோ தாதுணர்ந் தருளால்
எண்ணிலாப் பாடல்கள் கூறருட் புலவா
தனிமையும் மோனமும் மேவியே பொதிகைத்
தண்வரைக் குகையினில் அமர்ந்தமே லவனே
பனிமலர் கொண்டுநின் பக்தர்கள் பலரும்
பரவிட முன்றிலிற் காத்திருக் கின்றார்
இனுமெனக் கருள்செயத் தாமதம் வேண்டா
என்குரு வேபள்ளி யெழுந்தரு ளாயே. 3

ஈரமில் லாமனத் தினர்பால் மருவா
தென்றுமெய் யன்பர்பால் எய்திடச் செய்தாய்
ஆரமும் மலரும்நீ ருங்கொடே பூசை
ஆற்றியைம் புலனையும் வென்றுநிற் பதுவே
வீரமென் றுலகுக் குணர்த்தினுய் ஞான
வித்தகா சுத்தசாத் வீகமாம் சொருபா
சேருமென் பவமெனும் மலைதுகள் செயவே
சீரிய னேபள்ளி யெழுந்தருளாயே. 4

உத்தம வாழ்வையிவ் வுலகிலெல் லோரும்
உண்மையில் நடத்திடற் கானநன் னெறியைச்
சுத்தம னத்துடன் தந்தருள் புரிவோய்
துரியநல் வெளியினில் சோதியைக் கண்டே
நித்தமும் சச்சிதா னந்தவிண் ணமுதை
நிட்டையி லிருந்தருந் திடுமகா யோகி
இத்தரு ணத்தினில் எனக்கருள் புரிய
என்குரு வேபள்ளி யெழுந்தரு ளாயே. 5

ஊசலிற் கயிறுகள் அறுந்துவீழ் பலகை
ஓரிடத் தசைவுறு தமைவதைப் போன்றே
மாசுறு வினைக்கயி றறுந்துமோ னத்தில்
மன்னிய முனிவனே ஞானமா மழுவால்
ஆசையெ னும்விருட் சத்தினை யழித்தே
ஆணவக் காட்டையும் அழிக்குமே லவனே
தேசுறு திருவருட் கொடியினை நிறுவும்
தேசிக னேபள்ளி யெழுந்தருளாயே. 6

எண்ணமும் சொற்களும் செய்கையும் தூய்மை
எய்தியே திகழுதல் வேண்டுமென் றினிதே
புண்ணிய மிக்கமெய் யன்பரைத் தேடிப்
புனிதநன் மொழிகளால் அருள்நெறி யுரைக்கும்
திண்ணிய மோனியே ஞானியே பொழுதும்
திவ்யமாய்ப் புலர்ந்தது வினையிருள் நீங்க
உண்ணெகி ழுணர்வினுல் உண்மையை யுணர
உவந்தரு ளப்பள்ளி யெழுந்தரு ளாயே. 7

ஏதுவும் யுக்தியும் உரையும்யோ சனையும்
இனியஆ ராய்ச்சியெல் லாங்கடந் திலகும்
நாதனைப் போதனைத் தீதிலா நெறியால்
நாடுகென் றுலகினர்க் கன்பொடு நவின்றோய்
சூதுவஞ் சனையிருள் தொலைந்ததின் னருளாம்
சூரியன் உதயமெற் பணுகினன் காணாய்
ஏதுவந் தாலும்அஞ் சேல்எனப் புகலும்
என்குரு வேபள்ளி யெழுந்தரு ளாயே. 8

ஐந்துபூ தங்களும் அவைகளின் தொழிலும்
அளவிலா வுலகமும் கடவுள்பே ரருளால்
வந்துதித் தேயிருந் தழியும்முன் போலே
வருமிவற் றினில்மயங் காதருள் வெளியைச்
சிந்தைசெய் திடுகவென் றினிதுணர்த் திடுவோய்
திருவருட் கதிரவன் உதித்தனன் காணாய்
எந்தையே அருள்கவென் றன்பரேத் துகின்றார்
என்குரு வேபள்ளி யெழுந்தரு ளாயே. 9

ஒப்புயர் வற்றமெய்ப் பொருளெனும் கதிரோன்
உதித்தனன் வினையிரு ளொழிந்ததுள் ளமெனும்
நற்பெருங் கமலமு மலர்ந்ததிவ் வாயால்
நவிலரு மாயையாம் பனியகன் றதுகாண்
தப்பிலா வுணர்வினால் இறைவனைக் கருதும்
தருணமிஃ தேயென வொலித்ததொண் சங்கம்
இப்பிற வியினில்மெய்ந் நிலையுணர்ந் திடவே
எனக்கரு ளப்பள்ளி யெழுந்தரு ளாயே. 10

ஓதுநூல் யாவினும் உறைந்திடும் பொருளை
உள்ளுணர்ந் தருளினால் அறிவொளி மிகுந்தே
தீதிலா ஆன்மஞா னப்பொருள் திரட்டித்
திவ்யமாய் உலகினர்க் கேதரற் கெண்ணிக்
கோதிலா அடியவர் இருப்பிடம் தேடிக்
கொண்டுசென் றேஉப தேசங்கள் அருளும்
சாதுவே ரெட்டியப் பட்டியில் தோன்றும்
சற் குரு வேபள்ளி யெழுந்தரு ளாயே. 11

ஔவியம் அற்றநெஞ் சினர்களாய் உலகோர்
அன்புடன் விளங்கிட வேண்டிநன் றுழைத்தோய்
செவ்விய பிள்ளையார் குப்பநன் னகரில்
திருவருள் விலாசத் தன்னையார்க் கருள்வோய்
திவ்விய மாய்த்திருச் சாத்தனூ ரினில்நின்
சீரருட் கொடியைநாட் டியபெருந் திறலோய்
எவ்வுயி ரும்பே ரின்புற நினைக்கும்
என்குரு வேபள்ளி யெழுந்தரு ளாயே, 12

அஃகலில் லாதமெய்ச் சுகம்விரும் பாமல்
அல்லுநண் பகலுமாய் அனுதினம் உழைத்தும்
வெஃகிய சுகம்பெறு துலகுளோ ரெல்லாம்
வீணிலே மாள்வதைக் கண்டிரக் கமுடன்
சுஃறென வினைக்கடல் வற்றிடச் செய்யும்
தூயநன் னெறியினை யெளிதிலே காட்டி
இஃதுதான் வழியெனச் சொல்லியின் பருளும்
என்குரு வேபள்ளி யெழுந்தரு ளாயே. 13

நன்றி; [குருபர வணக்கம்.]

---

# திருமஞ்சனம்

**வீட்டில் விநாயகர் திருவுருவம் வைத்து வழிபடுவோர் தினமும் காலையில் அபிடேகம் செய்ய வேண்டும்.**

அபிடேகம் செய்யும் இடத்தில் மூர்த்தியை எழுந்தருளச் செய்யுமுன் விண்ணப்பித்துக் கொள்ளவேண்டிய முறை:-

என் உள்ளத்தே அமர்ந்திருக்கும் இறைவா! புறத்தே அடியேன் செய்ய இருக்கும் அபிடேகத்தை ஏற்றுக்கொள்ள எழுந்தருளுங்கள்.

## அபிடேகம் செய்யும்போது கூறவேண்டுபவை:-

### எண்ணெய்

தைலதாரை போன்று என் மனம் உம்மிடம் ஈடுபட்டிருக்க அருள்புரிவீர் குருநாதா!

### நீர்

புறத்தே நீர் தூய்மை செய்வதுபோல, அகத்தே 'அன்பு' என்னும் நீர் என்னைத் தூய்மை செய்யட்டும்.

### பால்

பாலில் நெய் கலந்திருப்பதுபோல, எல்லா உயிர்களுள்ளும் கலந்திருக்கும் பொருளே! இப்பால் அபிடேகத்தை ஏற்றுக்கொள்ளுங்கள்.

---

குறிப்பு:-

1. நாள்தோறும் தண்ணீரும், பாலும் கொண்டு திருமஞ்சனம் செய்தாலும் போதும். விசேட நாட்களில் எல்லாப் பொருள்களையும் கொண்டு சிறப்பாகச் செய்யலாம்.

2. கற்சிலையாயின் நல்லெண்ணெய்க்காப்பு செய்விக்கவேண்டும். செய்தபின், திருமஞ்சனப்பொடியால், பிசுபிசுப்பின்றி தூய்மை செய்ய வேண்டும். உலோகச் சிலையானால் எண்ணெய்க்காப்பு செய்விக்கக் கூடாது. புளியிட்டுத் தூய்மை செய்யவேண்டும்.

3. அபிடேகம் தொடங்குமுன், அபிடேகத்துக்காகச் சேகரிக்கப் பெற்ற தண்ணீரில், வெட்டிவேர், விளாமிச்சிவேர், பன்னீர் போன்ற வாசனைப் பொருளைச் சேர்க்கலாம்,

### தயிர்

அடியார்கள் உள்ளங்களைப் பக்குவமாய் ஞானக் கனலில் காய்ச்சி, ‘அன்பு’ என்னும் பிறையூற்றி அருளுவதுபோல, இத்தயிர் அபிடேகத்தை ஏற்றுக் கொள்ளுங்கள்.

### இளநீர்

அடியார்கள் மனமெனும் பாறையைத் தகர்த்து, ‘அன்பு’ என்னும் தெளிந்த நீரைத் தாங்கள் ஏற்றுக் கொள்வதுபோல, இந்த இளநீர் அபிடே கத்தை ஏற்றுக்கொள்ளுங்கள்.

### எலுமிச்சம்பழம்

அடியார் மனம் என்னும் செம்பு களிம்பேறு வண்ணம் தங்கள் திருநாமமாகிய எலுமிச்சம் பழத்தால் தூய்மை செய்வது போல, இவ் எலுமிச்சையை ஏற்றுக்கொள்ளுங்கள்.

### பஞ்சாமிர்தம்

அடியார் பக்குவத்திற்கேற்ப, உடலில் ஐந்து இடங்களில் அமிர்தம் சுரக்கச் செய்து, அவர்களை ஆட்கொள்ளுவது போல, இந்தப் பஞ்சாமிர்தத்தை ஏற்றுக்கொள்ளுங்கள்.

---

4. ஒவ்வொரு பொருளைக் கொண்டு அபிடேகம் செய்ததும், மலர்சூட்டி, தூபதீபம் காட்டி, பழம், வெல்லம், கற்கண்டு போன்ற பொருள்களைவைத்து நைவேத்தியம் செய்வது சிறப்புடையது. நைவேத் தியம் செய்யப்பெற்ற நிர்மால்யப் பொருள்கள், நைவேத்தியத்திற்காக உள்ள புதிய பொருள்களுடன் கலந்து விடாமல், தனியாகச் சேமித்து வைக்க வேண்டும்.

### விபூதி

அடியார் மனம் ஞானக் கனலால் எரிந்து பற்றற்ற சாம்பல் நிலையை அடைவதைக் குறிக்கும் விபூதியை ஏற்றுக்கொள்ளுங்கள்.

### சந்தனம்

தான் கரைந்து பிறர்க்கு மணம் கொடுக்கும் சந்தனத்தைப் போல, யான் என்றும் பிறர்க்கு மகிழ்வை ஊட்ட அருள்புரிவீராக.

### பன்னீர்

தங்கள் வருகையால், தாங்கள் எழுந்தருளுவதால் அடியார் உள்ளங்கள் கமழ்ந்து மணம் வீசுவது போன்று, மணம் வீசும் இப் பனிநீரை ஏற்றுக் கொள்ளுங்கள்.

### கனகாபிடேகம்

அடியார்கள் மனத்தை மாற்றுயர்ந்த பொன்னுக மாற்றியருள வல்லவரே! இக் கனகாபிடேகத்தை ஏற்றருளுங்கள்.

---

5 ஆராதனை நடப்பதற்குமுன், அபிடேகம் செய்யப் பெற்ற விபூதி, பன்னீர், பால், தயிர், பழம் முதலான எந்தப் பொருளையும் யாரும் பயன்படுத்தக் கூடாது.

6: அபிடேகம் செய்கையில், ஆண்டவர் அருட் பாடல்களை ஓதிக்கொண்டு செய்யலாம். ஆண்டவர் திருநாமத்தை ஓதிக்கொண்டும் செய்யலாம். வாய்திறவாமல், எதுவும் பேசாமல், உதடு அசையாமல், மவுனமாக ஆண்டவர் திருநாமத்தை மனதுக்குள்

## வஸ்திரம் அணிவித்தல்

உலகை ஆடையாக அணிந்து ஆட்சிபுரியும் வள்ளலே! இந்த உடையை ஏற்றருளுங்கள்.

## மலர் சூட்டுதல்

பல நிறங்களில் பல மணம் வீசும் அடியார்களின் உள்ளங்களாகிய மலர்களை ஏற்றுக் கொள்ளும் பரமரே! இம்மலர்களை ஏற்றருளுங்கள்.

## வலம் வரல்

ஓம் குரு ப்ரம்மா, குரு விஷ்ணு, குருதேவோ மஹேச்வர: குருஸாக்ஷாத் பரப்ரம்மா, தஸ்மை ஸ்ரீ குருவே நம: (மூன்றுமுறை வலம்வர வேண்டும்) (தமிழில்) குருவே என்னைப் படைத்தவர், குருவே என்னைக் காப்பவர், குருவே என் ஆங்காரம் அழித்து என்னைத் தன்னோடு இணையச் செய்பவர். எல்லா இடங்களிலும் நிறைந்திருக்கும் பரிபூர்ணர் அவரே. அவரை வணங்குகின்றேன்.

---

தியானித்தவண்ணம் அபிடேகம் செய்தல் மேலும் சிறப்புடைத்தாகும்.

[மாலை வழிபாட்டில் அபிடேகம் தவிர மற்ற யாவும் செய்தல் வேண்டும்.]

---

எல்லாமாய் அவன் இருக்கின்ற தன்மையை அறிவதற்குப் பலகாலம் சாதனை செய்ய வேண்டும். அவ்வாறு சாதனை அதாவது பயிற்சி இல்லாதவர்கள் பேரண்டத்தின் பெரு விளக்காய்த் திகழ்கின்ற அப்பேரொளிப் பிழம்பின் சந்நிதியைக் காணவும் முடியாது அடையவும் முடியாது.



இரெட்டியப்பட்டி

## ஸத்குருநாதர் ஷோடச நாம அர்ச்சனை

ஓம் ஸத்குரு ஶ்ரீ ரெட்டியப்பட்டி ஸ்வாமி பாதார விந்தயோ:ஷோடச நாமார்ச்சன பூஜாம் கரிஷ்யே.

ஓம் ஸத்குரு மூர்த்தயே நம: ஓம்
ஓம் சிவகுரு மூர்த்தயே நம: ஓம்
ஓம் ஞானகுரு மூர்த்தயே நம: ஓம்
4 ஓம் மஹாகுரு மூர்த்தயே நம: ஓம்

ஓம் ஶ்ரீ குரு மூர்த்தயே நம: ஓம்
ஓம் ஆத்மகுரு மூர்த்தயே நம: ஓம்
ஓம் ஜகத்குரு மூர்த்தயே நம: ஓம்
8 ஓம் சாந்தகுரு மூர்த்தயே நம: ஓம்

ஓம் ஸர்வைச்வர்ய ஸ்வரூபாய நம: ஓம்
ஓம் ஸர்வரோக நிவர்த்தகாய நம: ஓம்
ஓம் ஸர்வாபீஷ்ட தாயகாய நம: ஓம்
12 ஓம் ஸர்வ ஸித்தி ப்ரதாயகாய நம: ஓம்

ஓம் ஸர்வஜ்ஞாய நம: ஓம்
ஓம் ஸர்வ வல்லபாய நம: ஓம்
ஓம் ஸர்வாத்ம ஸ்வரூபாய நம: ஓம்
16 ஓம் ஸத்குரு ஶ்ரீ ரெட்டியப்பட்டி ஸ்வாமிநே
நம: ஓம்

நானாவித திவ்ய பரிமள மந்த்ர புஷ்பாணி
ஸமர்ப்பயாமி.

ஓம் ஓம் ஓம்



இரெட்டியப்பட்டி ஸத்குருநாதர்

# அஷ்டோத்தர சதநாம அர்ச்சனை

(அட்சர நட்சத்ர மாலை)

(அர்ச்சனை செய்கையில் ஒவ்வொரு நாமத்திற்கும் முன்னும் பின்னும் 'ஓம்' என்னும் பிரணவத்தைச் சேர்த்துக் கொள்ளவும்)

அன்புரு வாய்ஒளிர் அண்ணல் நமோநம
துன்பம் விலக்கிடு தூயோய் நமோநம
இன்பம் அனைத்தையும் ஈவோய் நமோநம
அன்புடை யோர்கட் கருள்வோய் நமோநம

ஆதர வேசெயும் ஐயா நமோநம
தீது தவிர்குரு தேவா நமோநம
நீதிகாத் தருளும் நேயா நமோநம
சாதுவாய் அருளும் சாமீ நமோநம

இருள்கெடப் புரியும் ஏகா நமோநம
மருளை மாற்றியருள் வள்ளால் நமோநம
கருணையைச் சொரியும் கண்யா நமோநம
புருஷ ச்ரேஷ்டன்எனப் போந்தாய் நமோநம 12

ஈசன் அன்பர்களைக் காப்பாய் நமோநம
ஏசு முகம்மதொத்த எந்தாய் நமோநம
ஏசு வோர்க்கும் நலம் ஈவோய் நமோநம
தேசு மிக்கஅருட் செல்வா நமோநம

உத்த மக்குண உதாரா நமோநம
சுத்த ப்ரம்மஒளி தோய்வோய் நமோநம
சித்தி யாவுமுற்ற சீலா நமோநம
புத்தியைத் திருத்து புண்யா நமோநம

ஊமை பேசச்செயும் ஒருவாநமோநம
காமம் நீக்கிடு மகானே நமோநம
சேம நிதியனைய தேவே நமோநம
யாம ளப்பரும் இயல்பே நமோநம 24

ஏதுவும் செய்யவல்ல ஈசா நமோநம
இதய மாசகற் றிறைவா நமோநம
புதுமை பழமை பொலிவோனே நமோநம
சுதினம் எவையும்எனச் சொல்வோய் நமோநம

ஏக்கம் தவிர்த்தினி தருள்வோய் நமோநம
தூக்கம் தொலைத்தசுக ரூபா நமோநம
மார்க்கம் வகுத்த சுப்ரமண்யா நமோநம
யார்க்கு மேஅருள் இனியோய் நமோநம

ஐந்து பொறிகளை அவித்தோய் நமோநம
முந்தும் ஆணவம் முறித்தோய் நமோநம
சிந்தென் வினைகள்வற்றச் செய்தோய் நமோநம
மந்தி ரம்புகல் மணியே நமோநம 36

ஒன்றி றையென உரைத்தோய் நமோநம
என்றும் மெய்சொல இசைத்தோய் நமோநம
நன்று செய்திட நவின்றோய் நமோநம
பொன்றும் பாவம்என்ற புனிதா நமோநம

ஓம் எனும் பொருள் உரைப்போய் நமோநம
பூமியில் வந்தருள் போதா நமோநம
மாமயல் தவிர் மருந்தே நமோநம
நாம ரூபம் உறு நாதா நமோநம

ஔவை போல்மொழி அருள்வோய் நமோநம
திவ்ய நெறியை அருள்செய்வோய் நமோநம
எவ்வுயிர்க்கும் இரங்குவோய் நமோநம
வெவ்வினைகள் வீழ்த்தும் வீரா நமோநம 48

கற்றிடா தெவையும் கற்றோய் நமோநம
உற்ற உண்மை உணர்விப்போய் நமோநம
சொற்றிறன் மிகுசொற் செல்வா நமோநம
குற்றமும் குணமாய்க் கொள்வோய் நமோநம

ஙகரம் எனவே இங்ஙன் ஏற்போய் நமோநம
சுகுணம் அனைத்தும் நல்கு சுத்தா நமோநம
சகல மொழிகளில் சதுரா நமோநம
புகலொ ணுதபுகழ் பூண்டோய் நமோநம

சமயம் யாவும் கண்ட சாந்தா நமோநம
சமரசத்தை அருள் சாதூ நமோநம
அமல பக்தி அருள் அன்பா நமோநம
நிமலன் கோயில் நிறுவுவோய் நமோநம 60

ஞமலி எனைத்திருத்தும் நாதா நமோநம
விமலன் அருள்சுக விளக்கே நமோநம
குமரன் எனப்பொலியும் கோனே நமோநம
நமனை வென்றசிவ ஞானீ நமோநம

டம்ப மின்றிமிளிர் தக்கோய் நமோநம
நம்புவோர்க் கருளும் நல்லோய் நமோநம
உம்பர் நாதன் அருள் உண்போய் நமோநம
வம்பர் களையும்வெல்ல வல்லோய் நமோநம

இணக்க மாகச்சுகம் ஈவோய் நமோநம
வணக்கம் செயும்முறை வகுத்தோய் நமோநம
அணுத்வம் ப்ரமத்வம் முதல் ஆனோய் நமோநம
நுணுக்கம் உணர்த்தும்ஞான நூலோய்
நமோநம 72

தந்தை தாய்குரு என்தலைவா நமோநம
சிந்தை சொல்செயல் செழிப்பே நமோநம
விந்தை பலவிளக்கும் விபுவே நமோநம
எந்தை அருள் உலகுக் கீவோய் நமோநம

நுன் மனத்தினில் நண்ணுவோய் நமோநம
கன் மனத்தையும் கரைப்போய் நமோநம
புன்மை தீர்த்தருள் புராணு நமோநம
வன்மை மிக்கமறை வாயா நமோநம

பகரொணுத்தவம் பண்ணினேய் நமோநம
நிகரிலாதஒரு நேயா நமோநம
இகபரம் தரும் இறைவா நமோநம
யுகமிதில் சிறந்த யோகீ நமோநம 84

மறைமுதல் துதி வரைந்தோய் நமோநம
நிறைவுறும் துதி புனைந்தோய் நமோநம
கறையிலா உளம்கொள் கர்த்தா நமோநம
முறை யுணர்த்திய முதல்வா நமோநம

யதிகள் வாழ்த்தும்யதி ராஜா நமோநம
விதி விலக்குசொல் விவேகா நமோநம
பதிதொறும் செலும் பகவா நமோநம
கதியை நல்குகருணாளா நமோநம

ரத்தினம் என ரமிப்போய் நமோநம
முத்து ராமர்குரு மூர்த்தீ நமோநம
சுத்த அருள்விலாஸ ஜோதீ நமோநம
முத்து சாமிக்கருள் மோனீ நமோநம 96

லச்சை தீர்த்த லாவண்யா நமோநம
இச்சை பூர்த்திசெயும் ஈசா நமோநம
விச்சை யாவும்வல்ல வீரா நமோநம
கொச்சை தீர்த்தருள் கொடுப்போய் நமோநம

வஞ்சமற்ற அருள் வாரீ நமோநம
சஞ்சலம் தவிர்க்கும் தந்தாய் நமோநம
நெஞ்சில் நின்றருள் நிமலா நமோநம
மிஞ்சு கர்வம் விலக்குவோய் நமோநம

அழகன் ஒளிவிளக்கும் அப்பா நமோநம
பழகு தமிழளித்த பண்பா நமோநம
விழையும் அனைத்தும்தரு மேலோய் நமோநம
அழிவில் அருள்வழங் கறிவே நமோநம 108

ஓம் ஓம் ஓம்.

## விநாயகர் ஷோடச நாம அர்ச்சனை

ஓம் ஸுமுகாய நம: ஓம்
" ஏகதந்தாய நம: "
" கபிலாய நம: "
" கஜகர்ணிகாயநம: "
" லம்போதராய நம:"
" விகடாய நம: "
" விக்னராஜாய நம: "
" தூமகேதுவே நம: "

ஓம் கணாத்யக்ஷாய நம: ஓம்
" பாலசந்த்ராய நம,"
" கஜானனாய நம: "
" வக்ரதுண்டாயநம: "
" சூர்ப்பகர்ணாயநம: "
" ஹேரம்பாய நம: "
" ஸ்கந்தபூர்வஜாய நம: "
" ஸ்ரீபரிபூர்ண விநாயக ஸ்வாமினே நம: ஓம்

நானாவித திவ்ய பரிமள மந்த்ர புஷ்பாணி ஸமர்ப்பயாமி

## விநாயகர் 112 நாம அர்ச்சனை

பூரணப் பொருளாய் எங்கும் பொலிந்தருள் புனிதா போற்றி
ஆரண முதலாய் அந்தம் நடுவுமாய் அமைந்தாய் போற்றி
காரண மாகி மேலாம் கருணைசெய் கர்த்தா போற்றி
சீரண வால வாயில் திகழும் ஐங் கரனே போற்றி

இருடியர் பட்டி யண்ணல் எதிரில்தோன் றிடுவோய் போற்றி
பருதிபல் கோடி போன்று படரும்பே ரொளியோய் போற்றி
திருடியென் னுள்ளம் கொண்ட தெய்வமா மணியே போற்றி
வருதியென் றழைத்து ஞான வாழ்வருள் மணாளா போற்றி

சட்டச்செந் நெறியைத் தந்து தரணியைப்
புரப்போய் போற்றி
துட்டரும் திருந்தச் செய்து துயர்தவிர் துணைவா
போற்றி
இட்டகாமியங்கள் யாவும் ஈந்தருள் இறையே
போற்றி
சிட்டர்கள் குழுவுள் மேவும் செழுந்தவப் பயனே
போற்றி

உடல் பொருள் ஆவிஅர்ப்ப ணிப்பவர் உறவே
போற்றி
அடல்மிகு தொழில்கள் ஐந்தும் ஆற்றும் அற்புதனே
போற்றி
திடபக்தி அன்பர்க் கீந்து தெருட்டுசீ ரியனே போற்றி
புடமிடு பொன்னைப் போன்று பொலியுமெய்ப்
போதா போற்றி 16

சத்தென எங்கும் மேவும் சத்துவப் பொருளே
போற்றி
சித்தனைத் தையும்மே லோர்கள் செயுப்புரி தேவே
போற்றி
அத்தனுய் அன்னை ஆசான் அருட்குரு வானோய்
போற்றி
முத்திப்பே ரின்ப மீயும் முழுமுதற் பொருளே
போற்றி

குறையெலாம் தவிர்த்தாட் கொள்ளும் குடிலையின்
வடிவோய் போற்றி
முறையொடும் தொழுவோர் உள்ள மீதொளிர்
முத்தே போற்றி
நிறைமிக உடையோர் தம்முள் நிலவுநின் மலனே
போற்றி
உறையொரைந் தையும் கடந்துள் ளொளிர்பரஞ்
சுடரே போற்றி

செம்பவ ளம்போல் மேவும் தேசுமிக் குடையோய்
போற்றி
உம்பர்மா முனிவோர் போற்ற உயர்வரம் தருவோய்
போற்றி
பைம்பொனைத் தொளிரும் உள்ளம் பண்புளோர்க்
கருள்வோய் போற்றி
எம்பெரு மானே என்னில் இனிதருள் புரிவோய்
போற்றி

செல்வமெல் லாமுமாகிச் செழுமைமிக் கருள்வோய்
போற்றி
கல்வியின் பயனாய் மேவும் கற்பகக் களிறே போற்றி
தொல்வினை தொலைக்கும் ஞான ஜோதியாய்த்
திகழ்வோய் போற்றி
பல்வளங் களுமாய் எம்மைப் பாலிக்கும் பதியே
போற்றி 32

அங்குச மேந்தி என்றன் அகந்தையை அழிப்போய்
போற்றி
கங்கையை நாளும் காலை காட்டியாள் பவனே
போற்றி
மங்களம் மனைகள்தோறும் மிளரச்செய் மகிபா
போற்றி
பொங்கருள் விளைவை யிந்தப் புவியுளோர்க்
கருள்வோய் போற்றி

பாசம்கொண் டேமன்பாசந் தனைத்தவிர் பரனே
போற்றி
நேசம்கொள் அடியார் தம்முள் நிலவஉய்த் திடுவோய்
போற்றி
ஈசனைக் கனிகொண் டின்பம் எவர்க்குமீந்
தருள்வோய் போற்றி
தேசொன்றும் அவ்வை கைலை செல்லஉய்த்
திடுவோய் போற்றி

வள்ளியை முருக வேட்கு மணமுடித் தருள்வோய்
போற்றி
கள்ளமில் உள்ளம் மேவும் கணங்களின் தலைவா
போற்றி
வள்ளலாய் வளமெல் லாமும் வழங்கும்வா ரிதியே
போற்றி
புள்ளிமா மயில்மேற் போந்து போதமூட் டிறைவா
போற்றி

ஓமெழுத் துள்ளப் பாறை மேல்வரை யொருவா
போற்றி
தாமத ராஜதங்கள் தீகர்க்கும் தற்பரனே போற்றி
காமனை வெலச்செய் ஞானக் கனலென
வொளிர்வோய் போற்றி
தீமைகள் அனைத்தும் நீக்கித் தெய்விகம் வளர்ப்போய்
போற்றி 48

மோதக பாணியாகி மூள்பசி தவிர்ப்போய் போற்றி
சாதனம் புரிவோர் யார்க்கும் தகவருள் தக்கோய்
போற்றி
பூதமைந் தாகியெங்கும் புனிதம்செய் திடுவோய்
போற்றி
சோதனை கொடுத்துத் தோத்தி ரம்செயப் புரிவோய்
போற்றி

விக்கினம் யாவும்நீக்கி யருள்செயும் விபுவே போற்றி
அக்கர மாகி நூல்கள் அனைத்துமாய் விரிந்தோய்
போற்றி
முக்கண்மா மூர்த்தியாகி மொழிமனம் கடந்தோய்
போற்றி
சொக்கன்மீ னாட்சிபோற்றும் சுந்தர மைந்தா
போற்றி

ஆதரம் பெருக என்னை அணைத்தின்பம் அருள்வாய்
போற்றி
மாதனமாகித் தூயோர் மனம்திகழ் மாண்பே
போற்றி
நூதனம் யாவுமாம் புராதனப் பொருளே போற்றி
பாதபங் கயமீந் தன்பர் பவம்தவிர் பர்க்கா போற்றி

காலங்கள் அனைத்தும் காணுக் கவின்மிக உடையோய்
போற்றி
மூலத்தின் மூலமான முடிவிலாப் பொருளே போற்றி
சீலத்தின் வடிவாய் எங்கும் செழிக்கும் சித்துருவே
போற்றி
ஞாலத்தில் வானம் காட்டும் ஞானதே சிகனே
போற்றி

அண்டம்பல் கோடிதாங்கும் அணிவயி றுடையோய்
போற்றி
பண்டங்கள் பலவும்வைத்துப் பரவுவோர்க்
கருள்வோய் போற்றி
தொண்டர்கள் துயரம் தீர்த்துச் சுகம்மிகத் தருவோய்
போற்றி
புண்டரி கத்தாள் போற்றும் புனிதர்கட் கருள்வோய்
போற்றி

பொருளினை விளக்கும் ஞான போத வித்தகனே
போற்றி
மருளினை வெல்லும் மார்க்கம் மகிக்கருள் மன்னு
போற்றி
இருள்கடி ந் திணையில்லாப்பே ரொளியருள் எந்தாய்
போற்றி
தெருளருள் பொருளாய் என்னுள் திகழும்ஏ ரம்பா
போற்றி

நல்லவர் நலங்கள் எய்த நாள்தொறும் அருள்வோய் போற்றி
தொல்லறம் பலவுமாகி அறப்பய னுவாய் போற்றி
அல்லவை அனைத்தும் தேய அறிவொளி யருள்வோய் போற்றி
வல்லபம் அனைத்தும் நல்கும் வல்லபை நாதா போற்றி

பிரமனன் றருளும் சித்தி புத்தியை மணந்தோய் போற்றி
திருமகள் மகளிர்பன்னி ருவரைவேட் டொளிர்வோய் போற்றி
திருமுறை பலவும் மன்றில் உளவென அருள்வோய் போற்றி
ஒருமுனி கரகம்சாய்த்துள் ஒண்புனல் நிறைப்போய் போற்றி

கவின் மலரோடு தூய கவிமலர் புனைவோய் போற்றி
புவிமிசை தலங்கள் தோறும் பொலிந்தருள் புரிவோய் போற்றி
நவைகளை நீக்கித் தூய்மை நல்குநா தாந்தா போற்றி
சுவைபல வாகியன்பர் துய்த்துய அருள்வோய்போற்றி

ஏடுசொல்லரிதாம் உண்மை என்னுளத் துரைப்போய் போற்றி
பாடுபட் டோர்கட் கின்பப் பரிசருள் பகவா போற்றி
ஈடிணையில்லா மோனச் செல்வமீந் தருள்வோய் போற்றி
ஊடலைத் தீர்த்துக்கூடி உயர்வெலாம் அருள்வோய் போற்றி

ஆணவ மாயை கன்மம் அகற்றியாள் அரசே போற்றி
காணரிதான காட்சி பலவும் காட்டிடு வோய் போற்றி
பூணரி தான தூய பொறையருள் பூர்ண போற்றி
மாணருட் செல்வம் நல்கி வாழ்வருள் வரதா போற்றி

சமயங்கள் அனைத்தினுக்கும் தலைவனாய் ஒளிர்வோய்
போற்றி
சமரச உணர்வை நல்கிச் சாந்தியைத் தருவோய்
போற்றி
அமலசெங் கமல பாதத் தன்புடன் சேர்ப்போய்
போற்றி
மமரெலாம் தவிர்த்தீ டில்லா மகிழ்வருள் வள்ளால்
போற்றி

அற்புதம் கோடி கோடி ஆற்றும்ஆண் டகையே
போற்றி
சொற்பதம் கடந்து மேவும் துரியவ தீதா போற்றி
கற்பனை காணற் கொண்ணு திலகுசிற் காந்தாபோற்றி
அற்பனென் றனையும் ஆட்கொண்டருள்புரி அண்ணல்
போற்றி

ஆகமம் கோடி கோடி யாய்விரி அழகா போற்றி
தேகம்நற் றளியாக் கொண்டு திருநடம் புரிவோய்
போற்றி
போகங்கள் அடியார் எய்தப் புரிந்தருள் பொற்பே
போற்றி
வேகம் கெட்டழியச் செய்து வீடருள் வேந்தேபோற்றி

வைகையங் கரையில் மேவும் வாரண முகனேபோற்றி
செய்கையெல்லாமும் நின்ன தாக்கொளும் செம்மால்
போற்றி
உய்கவென் றுயிரை யெல்லாம் உயர்த்தும் உத்
தமனே போற்றி
பொய்கல வாப்பே ரின்பம் புகட்டுபு ராணு போற்றி

அன்பினுல் உருகச் செய்துள் அரணெனத் திகழ்வோய்
போற்றி
மன்பதை யோங்கத் தூய மாண்நெறி அருள்வோய்
போற்றி

பொன்புரை மேனி காட்டிப் புணர்ந்த புண்ணியனே போற்றி
இன்பளித் தெனே விழுங்கும் ஏகநாயகனே போற்றி

குறிப்பு:
108 நாமங்கள் சொல்லி அர்ச்சனே செய்வது வழக்கம். நூறுக்குமேல் உள்ள எட்டு நாமங்கள், ஐம்பொறி அடக்கம், அஹிம்ஸை. பொறுமை, அன்பு, அருள், சத்யம், தவம், ஞானம் என்னும் அஷ்ட புஷ்பங்களேக் குறிக்கும்.

ஸ்ரீ பரிபூர்ண விநாயகர் எழுந்தருளியுள்ள மதுரை, துவாத சாந்த ஸ்தலமாதலின், நூறுக்கு மேல் பன்னிரண்டு நாமங்கள் சேர்ந்துள்ளன.

உண்மையான சட்ட அன்பன் தன் மனத்திற்குப் பிடித்தமான தெய்வ வழிபாட்டை மேற்கொண்டு, மற்ற தெய்வ வழிபாடுகளேயும் ஆதரிப்போனுகவே இருத்தல் வேண்டும். இதுவே சூத்திரம். இதைச் சொல்லால் அறிய முடியாது.

சட்டத்திலுள்ள அடியார்கள் எந்தவிதமான யோகநிலேயும் பயிலவேண்டுவது அவசியமில்லே. அவர்கள் சத்குருவை நினேந்து நினேந்து, அவரருளே நாடி நாடி எண்ணுகின்ற எண்ணம் ஒன்றே போதும். இதுவே மூலக்கனலே எழுப்பும் இரகசியமாகும்.

## ஸ்ரீ அருட்சக்தி அன்னையார் ஷோடச நாம அர்ச்சனை

அருளே போற்றி, அறமே போற்றி,
தெருளே போற்றி, திறமே போற்றி,
அகமே போற்றி, அறிவே போற்றி,
இகமே போற்றி, எழிலே போற்றி,
தவமே போற்றி, தகவே போற்றி,
புகழே போற்றி, பொலிவே போற்றி,
சத்தே போற்றி. சித்தே போற்றி,
பொருள் விளக்கம்தரு பொன்னே போற்றி,
அருள்வினை வேற்றிடும் அன்னே போற்றி,

ஓம் ஓம் ஓம்



## ஸ்ரீ அருட்சக்தி அன்னையார் 111 நாம அர்ச்சனை

அருட் சட்டம் வளர் அன்னையே போற்றி
ஆர்வ மிகத்தரும் ஆற்றலே போற்றி
இம்மையும் மறுமையும் என்றுளாய் போற்றி
ஈட்டுமெய்த்திருவின் தேட்டமே போற்றி
உண்மையை விளக்கும் திண்மையே போற்றி
ஊக்கம் உண்டாக்கிடும் ஆக்கமே போற்றி
எமையெலாம் காக்கும் இறைவியே போற்றி
ஏற்ற மிகும்தவத் தோற்றமே போற்றி
ஐம்பொறிகளை வெலும் ஆற்றலே போற்றி
ஒருநெறிக் கீர்த்தமு தூட்டுவை போற்றி 10

ஓமெனும் மந்திரம் ஓதுவை போற்றி
ஔவைபோல் நல்லுணர் வருளுவை போற்றி
அஃகலில் திருவென் றமைந்தனை போற்றி
கண்பெறக் கருணை காட்டுவை போற்றி
ஙப்போல் எமையாள் பொற்பே போற்றி
சக்தி அனைத்தும் தரவலாய் போற்றி
ஞயம்பட உரைக்குமெய்ஞ் ஞானமே போற்றி
டம்பமில் லாதொளிர் தன்மையே போற்றி
ணகரம் போல்வணக் கிடுவாய் போற்றி
தக்கவர் புகழும் பக்குவம் போற்றி 10

நன்மை யெலாம்தரும் ஞாயிறே போற்றி
பக்தியின் வடிவாய்ப் படர்ந்தனை போற்றி
மனம் அடங்கப்புரி மாட்சியே போற்றி
யக்ஞம் மெய்த் தவமெனும் மஞ்ஞையே போற்றி
ரந்திரம் அறியும் தந்திரம் போற்றி
லங்கணம் ஏற்கும் லாவண்யமே போற்றி
வழியினை விளக்கும் வான்பொருள் போற்றி
அழகருள் என்றுணர்த் தாட்சியே போற்றி
அளவில் மெய்யடியார்க் கரசியே போற்றி
அறத்தின் பயன்என அமைந்தனை போற்றி 30

அனவரதமும் தவம் ஆற்றுவை போற்றி
கதிபெற அழைக்கும் கருணையே போற்றி
காணரிதாம் தவக் காட்சியே போற்றி
கிருபை சுரந்திடும் கேளிரே போற்றி
கீழ்மை யெல்லாம் தவிர் மேன்மையே போற்றி
குற்றமும் குணமாக் கொள்ளுவோய் போற்றி
கூற்றினை வென்றொளிர் ஏற்றமே போற்றி
கெடுதியை விலக்கும் கிருபையே போற்றி
கேட்டதெல்லாம் தரும் நாட்டமே போற்றி
கைப்பொருளாய்த்திகழ் மெய்ப்பொருள் போற்றி 40

கொடைவடி வாயொளிர் கொள்கையோய் போற்றி
கோபமே காணரும் குணமணீ போற்றி
கௌரிசேய் கருணையைக் காட்டுவை போற்றி

சற்குரு பெருமையைச் சாற்றுவை போற்றி
சாந்தமே வடிவாம் சக்தியே போற்றி
சின்மயம் விளக்கும் செம்மையே போற்றி
சீதநீரின் திறம் செப்புவை போற்றி
சுசிருசி யோடமு தூட்டுவை போற்றி
சூட்சுமம் உணர்த்தும் மாட்சிமை போற்றி
செய்கையைத் திருத்தும் தெய்வமே போற்றி

சேமம் எல்லாம்தரும் நேமமே போற்றி
சைலமொத் துள்ளொளிர் தத்வமே போற்றி
சொத்தரு ளாமெனும் சுருதியே போற்றி
சோர்வனைத் தும்தவிர் தூய்மையே போற்றி
சௌபாக் கியம்தரும் தாய்மையே போற்றி
தவம்செயத் தூண்டருட் சக்தியே போற்றி
தாமதி யாதருள் தரவலோய் போற்றி
திருவருள் திருமிகச் சேர்த்துளோய் போற்றி
தீனர்பால் கருணைசெய் ஞானமே போற்றி
துறவுளம் கொண்டொளிர் தோற்றமே போற்றி

தூக்கமில் ஊக்கமாம் ஆக்கமே போற்றி
தெய்விகம் பழுத்தொளிர் செய்கையோய் போற்றி
தேடரி தாம்பெருஞ் செல்வமே போற்றி
தைரியம் ஊட்டும் நல் தாய்மையே போற்றி
தொழுதுயும் வழியைச் சொலவலோய் போற்றி
தோடமே கருதாப் பாடமே போற்றி
தௌர்ப்பாக் கியம்தவிர் சத்யமே போற்றி
நன்மை யனைத்தையும் நல்குவோய் போற்றி
நாதாந்த நாட்டின் நடுவுளோய் போற்றி
நினைக்குமுன் வழங்கும் நேர்மையே போற்றி

நீதியை விளக்கும் ஜோதியே போற்றி
நுட்பம் எல்லாம் உணர் திட்பமே போற்றி
நூல்களின் உட்பொருள் நுவலுவை போற்றி
நெறியினிற் பிறழா நீர்மையே போற்றி
நேம நிட்டையிலே நிலைத்துளாய் போற்றி

நைந்துரு கடியருள் நண்ணுவை போற்றி
நொடியினில் உதவருள் வடிவமே போற்றி
நோக்கம் உள்ளாக்கென நுவலுவை போற்றி
நோற்றலே உயர்வெனச் சாற்றுவை போற்றி
நௌவென விளங்கருள் நாதமே போற்றி 80

பரிபாஷையின் பொருள் பகருவை போற்றி
பாத்திரம் அறிந்தருள் பான்மையே போற்றி
பிள்ளையார் குப்பப் பெருந்தவம் போற்றி
பீடுசால் நல்லுளம் நாடுவை போற்றி
புனிதரெல்லாம் புகழ் புண்யமே போற்றி
பூரண மானமெய்ப் போதமே போற்றி
பெய்திடு முகில்நிகர் பெற்றியோய் போற்றி
பேதபாவனை தவிர் பெருமையே போற்றி
பைநிறை பொருள்போல் படர்ந்தனை போற்றி
பொற்பெலாம் விளக்கும் சிற்பமே போற்றி 90

போதமாம் அமுதுட் புகட்டுவோய் போற்றி
பௌவம் நீந்தச்செயும் பண்பினை போற்றி
மதிபொழி யமுதுணும் மாண்பினை போற்றி
மாயையை விலக்கும் மகிமையோய் போற்றி
மிடிதவிர் மார்க்கம் விளம்புவை போற்றி
மீண்டு பிறவாநெறி விளக்குவை போற்றி
முத்தர்கள் போற்றுபுன் முறுவலோய் போற்றி
மூலமந்திரம் உள் முழக்குவோய் போற்றி
மெய்யுணர் வுறவருள் மேதையே போற்றி
மேல்நோக்கம் தரும் விஞ்சையே போற்றி 100

மையல் தவிர்த்தருள் மந்த்ரமே போற்றி
மொழிமனம் செயல்களின் முழுவளம் போற்றி
மோனமாம் கடலினுள் முழுகுவோய் போற்றி
மௌட்டியம் தவிர்த்தருள் வல்லபம் போற்றி
வத்துதத்துவம் நவில் வாய்மையோய் போற்றி
வாசிகண் டருள்திரு வளர்த்தனை போற்றி

விளக்கென எமக்குள் விளங்குவை போற்றி
வீடு பெறப்புரி விபுலமே போற்றி
வெளியினுள் ஒளியுணர் விழுப்பமே போற்றி
வேகம் தவிர்த்தருள் வேதமே போற்றி
வைராக்யம் ஊட்டருள் வண்மையே போற்றி 111

ஓம் ஓம் ஓம்

குறிப்பு:— அர்ச்சனை மொத்தமும் செய்ய இயலாத போது, குருநாதர் அர்ச்சனை மட்டும் செய்யலாம். முடிந்தால், விநாயகர் 16 நாம அர்ச்சனையையும், ஸ்ரீ தாய் 16 நாம அர்ச்சனையையும் செய்யலாம்.

# ஆராதனை

## தூபம்

அடியார் மனங்களில் உள்ள ஆணவமாதி மலங்களை ஞானக் கனலால் பொசுக்கும் போது உண்டாகும் புகையை ஒப்ப இத் தூபத்தை ஏற்றருளுங்கள்.

## தீபம்

உள்ளம் என்னும் விளக்கில் பக்தி என்னும் எண்ணெய் விட்டு, அன்பு என்னும் தீபத்தை ஏற்றி உள்ளே உள்ள அஞ்ஞான இருளகற்றி, உம்மைக் காணச் செய்யும் ஒளியைப் போல இத் தீபச்சுடரை ஏற்றுக் கொள்ளுங்கள்.

## நைவேத்தியம்

இறைவா! உம்மால் படைக்கப்பட்ட பல பொருள்களுள் இவ்வேளை எனக்குக் கிடைத்த இச் சிறுபொருளை உமக்கு ஆகுதி செய்கின்றேன்.

கடைக்கணித்து ஏற்று, எல்லா உயிர்களும் பசிப்பிணியற்று, இறையின்பம் பெற அருள் புரிவீராக.

### கற்பூரம்

அகந்தைக் கிழங்கை அகழ்ந்த தொழும்பர் உள்ளத்தில் தோன்றும் சுடர் விளக்காகிய உம்மை இந்த ஜோதியின்மூலம் யான் கண்டு உய்ய அருள் புரிவீராக.



ஸ்ரீ இரட்டியப்பட்டி சுவாமிகள் அருளிய

# விநாயகர் துதிப் பாடல்கள்.

ஐந்து கரத்தாய் அறுமுகற்கு நேர்மூத்தாய்
முந்த வுதித்த முதல்வா!—என் சிந்தை
குடியிருந்தே காக்கும் கோமான் உனையான்
அடிதொழுதேன் வந்தென்னை ஆள்.

நீயே துணையாகி நின்மலமாய் நிர்க்குணனுய்த்
தாயாகித் தந்தையாய்ச் சற்குருவாய்ச்—சேய்போல்
கருதியெனை யாண்ட கணபதியே அல்லால்
வருவதுயார் சொல்வாய் வழி

சென்மம் எடுத்ததொரு தீவினையோ யானறியேன்
கன்மமோ யாதோ கலங்கிடுவேன்—நன்மைபெற
ஆர்சொல்வார் நன்னெறிகள் அப்பனே நின்னடியார்
சார்வைத் தெரிந்திடவே சாற்று.

நன்றி; வழிகாட்டும் வான்பொருள்

உலகில் பெரியோராம் உத்தமரைக் காண
நலமுள் தெரியாத நாயேன்—கலைபலவும்
உற்றுணர்ந்தார் வாசல் ஒருக்காலும் சென்றறியாச்
சிற்றறிவேன் நன்மைபெறச் சேர்.

இராசவிருட் சம்சிவமாய் இன்வேம்பு சத்தியதாய்
ஆசையுடன் வந்தே அமைந்து வெகு—நேசமுடன்
புத்திரனைப் பெற்றார்இப் பூதலத்தில் எல்லோரும்
முத்திபெற வென்றே முதல்.

மதுரா புரிவடக்காய் வைகைநதித் தென்பால்
சதுரரார் ரயில்பாலந் தன்மேற்காய்—எங்கும்
கதித்தோங்கும் செந்நெல்சூழ் கட்டிடத்தின் கீழ்பால்
உதித்தாய்என் உள்ளத்துறை.

வினையகற்றும் பெருமான்இவ் வேளைவந்து
காத்தருள்வாய் விமல மூர்த்தி
உனையல்லால் வேறுதுணை உண்டோஇவ்
வுலகத்தில் ஒருவ ரில்லை
மனமுழன்று சுழல்கின்றேன் மாயவலைக்
குட்சிக்கி மதிம யங்கித்
தினமும்யான் அலைவேனோ சகிக்கவொண்ணாது
உனக்கபயம் செப்பு வாயே,

நாடுவோர்க் கெல்லாம் நாடிய படியே
நல்வரம் கொடுக்கும்நல் லீசன்
பாடுவோர் தமக்குப் பாடுதற் கிசைந்த
பயன்களை யளிக்கும்நற் பதத்தோன்
ஆடுவோர் கூத்தை அறிகின்ற சீலன்
அன்பர்தம் சிந்தையிற் புகுந்து
கூடியே உறவாய் வழியது காட்டிக்
குணங்களை உரைக்கும்மெய்க் குருவே

சீலமிகு செகதீசன் பெற்ற கண்ணே
தெவிட்டாத தெள்ளமுதே தேனே செந்தில்
வேலவர்க்கு முன்பிறந்த சுமுகா ஞான
வித்தகனே விண்ணோர்க்கு மேலா யுன்னை

ஞாலமுளோர் புகழ்ந்தேத்தும் விதங்கள் யாவும்
நாவினுற் சொலவொண்ணுது அருமை யென்னே
கோலமத குஞ்சரமே சதங்கை கொஞ்சக்
கூத்தாடி எனையாள வருகு வாயே.

அன்னையுமை மனமகிழ்ந்து பயின்ற பாலா
அனைவோர்க்கும் முதற்பொருளே அன்பர் சீலா
நன்னயமாய் நின்பால்வந் தடுத்தேன் என்றன்
நாவினுல் உனைப்பாட அருளிச் செய்தாய்
பன்னுதமிழ்க் கரசேமெய்ஞ் ஞான மூர்த்தி
பலகலைகள் ஆராயும் பயன்கள் நல்கி
இந்நிலத்தில் உன்மகிமை அறியச் செய்த
இங்கிதத்தை யொன்சொல்வேன் எம்பிரானே.

---

**ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் தோத்திரப்பா**
**ஸ்ரீலஸ்ரீ திருப்பாதிரிப்புலியூர் ஞானியார் சுவாமிகள்**
**1923ம் ஆண்டில் பாடிக் கொடுத்தது.**

திரண்டிடும் அடியார் தீவினை தீர்ப்பான்
திருவுருக் கொண்டஎம் சிவமே
அரண்தரும் நின்றன் அடிமரை மலரை
அனுதினம் போற்றிசெய் கின்றேம்
இரண்டறக் கலந்து இன்புற அருள் செய்வாய்
இணையிலாது உயர்ந்திடு பவனே
முரண்பட வில்லா இரெட்டியப் பட்டி
முதுநகர் வருகுரு பரனே

அன்புசெய் வார்க்கு வேண்டுவ தந்தே
அளித்திடு கருணையை உடையோன்
வன்புசெய் வார்க்கு மறக்கரு ணையினுல்
வகைபடு நலம்வரச் செய்வோன்

முன்புபின் பில்லா முதல்வனென்று இன்னும்
முழுமறை முழங்கிடு தலைவன்
நன்மனத் தவர்சூழ் இரெட்டியப் பட்டி
நகர்தனில் குருவென வந்தோன்.

தரைபுகழ் வளம்சேர் இரெட்டியப் பட்டித்
தனிநகர் வந்தடி யேங்கள்
உரைபுகழ் ஏற்றுஉன் கருணையை அளித்தாய்
உய்ந்தனம் உய்ந்தனம் என்றும்
வரையினிற் சிறந்த கயிலையை விட்டு
வந்தனை தந்தனை ஞானம்
குரைகட லுலகிற் கண்ணினிற் கண்ட
குறைவிலாத் தெய்வம்நீ யன்றோ?

கண்டிடும் பொருள்கள் பற்பல வாயும்
காணொணப் பலபொரு ளாயும்
விண்டிட முடியாப் பலபொரு ளாயும்
வேறுமாம் பலபொரு ளாயும்
தொண்டரை யாளும் குருபரனும்
துலங்கிடு சத்தியப் பொருளே
மண்டலம் புகழும் இரெட்டியப் பட்டி
வளநகர்க் குருபரா போற்றி

கருத்தினுக் கெட்டாக் கடவுளே உலகில்
கலந்திடும் அடியரைக் காப்பான்
உருக்கொடு வருவர் எனப்பல நூல்கள்
உரைப்பன வுண்மையென்று அடியேம்
தெரிந்திடத் தவர்சூழ் இரெட்டியப் பட்டித்
திருத்தலம் செழிக்கவந் திடுவோய்
விரிந்திடும் எங்கள் மனம்மிக வொடுங்க
வெளிவரு குருபரா போற்றி.

## அகவற்பா

பூந்தா மரைவதி புங்கவன் பிரமன்
படைத்திடு உலகில் படர்ந்த புண்ணியத்தால்
மானுடப் பிறவி மன்னிய உயிர்கள்
அறமுதல் நான்கும் அடைந்து உய்ந்திடுவான்,
கருணைகொள் பரமன் கருமணிக் கண்டன்
அன்பே வடிவாய் அமர்ந்திடு பரமன்
சச்சிதா நந்தத் தனிப்பெருஞ் சோதி
முத்தன், பத்தர் முழுமலம் போக்கிப்
பரஞா னம்தரு பரையொரு பாகன்
தூம்புடை எயிற்றுப் பாம்பணி சித்தன்,
அழிவில் இன்ப அருளுருக் கடவுள்,
மானைக் காட்டி மான் பிடிப்பது போல்
மானுட வடிவ வள்ளல் என்ன
குற்றம் போக்கும் குருபரன் என்ன
ஞானம் நல்கும் நாதன் என்ன
ஊனம் ஒதுக்கும் உத்தமன் என்ன
ஆதி அகற்றும் ஆப்தன் என்ன
நோயினை நீக்கும் நுண்ணியன் என்ன
பிறப்பை யழிக்கும் பிஞ்ஞகன் என்ன
இன்னன பலவாய் இயம்பிப் போற்ற
வருவன் என்ன, வந்திடு மறைகள்
சொல்லுவது உண்மையாத் துணிந்து, அடியேங்கள்
வாழ, இத்தரையில் வந்த சற்குருவே,
செந்தா மரைவதி செம்மல் செய் உலகில்
மக்களாய்ப் பிறந்தோர் வாய்த்திடும் நலங்கள்
அறம், பொருள், இன்பம் அமலவீடு என்ன
நான்கென அறைவர், ஞானம்சேர் பெரியோர்!
அந்நலம் நான்கில் அழிவில் வீடே
மேலாக் கொள்வது விவேகிகள் கடமை
அந்தநல் வீடும் அமல ஞானம் கொடே
பெறுதல் வேண்டும் பேதைமை யகற்றும்
ஞானமும் இணையில் மான் அமர் கையன்
வலமழு அமர்ந்த வள்ளல், இளமதி

கங்கை அரவு கலந்து வாழ் சடையோன்
அடியவர்க் காக அருளில் யமனை
உதைத்துத் தன்னை உற்றவர் அடையும்
நலமது தெரித்த நாதன் குருவாய்
வந்து உணர்த்திடின் அன்றி வந்திடுமோ தான்
ஏனைய சிறுவளன் எல்லாம் எய்திப்
பிறந்து இறந்து அயரும் பெற்றியர், அடியேம்
ஞானங் கொண்டே நணுகும் சிவபதம்
பக்குவர்க் கேற்பப் பயன் துய்த்திடுவான்
அப்பரன் இந்த அவனியர் புகழும்
தமிழ்இளந் தென்றல் தக்க தரளம்
சந்தனம் இவற்றின் பிறப்பிடமாகும்
பாண்டிய நாட்டில் ஈண்டிய நல்லோர்
கூடியேத்துங் குறைவில் ரெட்டியப்
பட்டி நகரில் பகர் வேளாண்குலம்
விளங்கப் பிறந்த வீர பத்திரர்
ஆவுடை மங்கையர் ஆற்றிய தவத்தால்
ஞாலம் துதிசெய் நளவரு டத்தில்
திரட்டு மழைபொழி புரட்டா சியினில்
இரண்டாம் தேதி இரேவதி செவ்வாய்
மாண்பு மிக்க மகரலக்கினத்தில்,
ஞானிக ளேத்த, நான்மறை துதிக்க,
மாதவர் வழுத்த, மன்னவர் பழிச்சப்,
புலவர் புகழப் பொருவரு மற்றையோர்
துதிக்கத் தோன்றிய துணையில் செம்மை
அறிந்து துதிக்கும் ஆற்றல் இல்லேம்
எளியரேம் வினைகள் இல்லாது அகலக்
கடைக்கண் செய்க கருணை வாரிதியே!
பிறவிக் கடலில் மூழ்கி மூழ்கிப்
பேர்அஞர் உற்றேம்; பிறவா வண்ணம்
ஞானந் தன்னை நல்க எங்கட்கே
அறக்கலை முதலா அறைபல கலையும்
உணர்ந்திடு திறத்தை உரைக்க எந்நாளும்
வாய்மை முதலா வகுத்திடு குணங்கள்

எங்கள் பாலிருக்க என்றும் அருள்செய்
உடற்கு உறுநோய் பல உற்றிடா வண்ணம்
திரமருந் துதவித் திருத்திடல் வேண்டும்
காம மாதி கடும்பகை எல்லாம்
கனவிலும் வெல்லாக் கடுந்திறல் தருக
வாட்டமில் மனத்தை வகுக்க நல் அருளோடு
எய்ப்பில் வைப்பே இணையில் சற்குருவே
கணபதி கழற் கால் கமலம் அரணுக்
கொண்டிடுவீர்! எனக் கூறுஞ் செம்மால்
தண்ணீர் தானே தகுந்த மருந்தாய்
எந்த நோய்தனையும் ஏகுவிக்கும்
வைத்திய நாத வள்ளால் போற்றி!
அட்டமா சித்துசெய் ஆண்டவ நீதான்
அறுபத்து ஆறே ஆண்டு இந்நிலத்தில்
விளங்கினை; பின்னர் விளம்பு துந்துபியின்
மார்கழி அனுஷம் மாண்புறு நாளில்
சோதியாய் விளங்குந் தூயவ னுனுய்!
அன்றைத் தினங்கொண்டு அகத்தினில் உன்னி
வாயின் வாழ்த்தி வணங்கி இம்மெய்கொடு,
பேறது பெற்றுப் பெருகு கின்றனமே
இயல்வது கொண்டே இயற்று பூசனையை
ஏற்று நாங்கள் இன்பம் எய்திடவே
அருள்செய் பரம குருவே! போற்றி!
பாட்டுறு ரெட்டிய பட்டிநகர் வாழ்
தேட்டக்குருவே! தெளிவுறு குருவே!
வாழ்க! வாழ்க! வள்ளல்நின் அன்பர்
வாழ்க! வாழ்க! வகையுளி என்றும்
வாழ்க! நின் தாமரை மலர்நிகர் அடியே!



# அடியார் பாடல்கள்

ஆரணப் பொருளேத் தானும் அறிந்திட வொருவ
னாகிக்
காரண சொரூபங் காட்டிக் காசினியடியார் தம்மைப்
பூரண வடிவ மாக்கிப் பொய்யெலாம் நீக்கியாள
வாரண ரெட்டிப் பட்டி வள்ளலேப் பணிகுவோமே.

காதல்கொண்ட பதார்த்தங்கள் பணிகள் நேமி
கனகமுயர் மாடங்கள் மனேவி மக்கள்
நீதிநெறி பத்திசித்தி அனம்பால் நெய்யும்
நீங்காத வித்தைபுத்தி திடங்கள் போத
சாதனங்கள் தத்துவங்கள் ஞான மோனம்
தந்தருள்வான் சாதிபுன்னே தெங்கு சூழும்
பாதலத்தி லுயர்ரெட்டிப் பட்டி சுவாமி
பாதகம லம்இரண்டும் பணிகின் ருேர்க்கே

ஆதிமுதல் எட்டெழுத்தும் நீயாய் வந்தாய்
அரும்பொருளாய் வந்துதித்தாய் ரெட்டிப்பட்டி
சோதனேயாய்ச் சோழன்மா ளிகையிற் சென்று
துட்டர்களேச் சம்மாரஞ் செய்ய வந்தாய்
வேதனேப்பட் டவர்களுன்றன் நாமம் சொன்னல்
வேண்டிய வரங்களெல்லாம் அவர்க்கே யீவாய்
வீதியெல்லாம் உன்நாமம் துதிக்க வென்று
விடைகொடுத்தாய் கும்பகோ ணத்திற் சென்றே.

## திருநாம மனனம்

ஓம் ஸ்ரீ ரெட்டியப்பட்டி ஸ்வாமிந் நமோ
நம:
[மூன்று முறை சொல்லவும்]

---

# பிரார்த்தனை-1

பரம சற்குருவே !

1. உம்மை மறக்கச் செய்யும் எந்த ஒரு பொருளும் என்னை யணுகா தொழிக.
2. உமது திருவருளை நினைவூட்டும் ஓர் அற்பப் பொருளையும் யான் போற்றி மகிழ்வேனாக.
3. காமமாதி கொடும் பேய்களெல்லாம் என் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளா வண்ணம் நீர் காத்தளிப்பீராக.
4. கருணையாம் உமது அருள் வெள்ளத்தில் யான் அமிழ்ந்து மூழ்குவேனாக.
5. செய்யும் செயல்களுக்கு யான் அதிகாரி இல்லை என்று உணர்த்துவீராக.
6. நன்மையும், தீமையும் நாயகன் அருள் என்று நாடுவேனாக.
7. புன்மைதரு புவனப் பொருள்களை யெல்லாம் விரும்பாது ஒழிவேனாக.
8. கொலைஞராயினும் உமது அடியாரை நீர் என எண்ணிப் போற்றுவேனாக.
9. என் உடல் பொருள் ஆவி அனைத்தையும் உமக்கே அர்ப்பணம் செய்தேன்.
10. ஏன்றெனைக் காப்பீர் ! காப்பீர் ! ! காப்பீர் ; ! !

# பிரார்த்தனை-2

பரம காருண்ய மூர்த்தியே ! பரப்ரம்ம சொரூபமே ! அடியார் அல்லலைப் போக்கும் அருந் துணையே ! இப்புவிமேல் உம் அருட்சட்டம் ஏற்று நடக்கும் அடியார்களான எவரும் ஒரு தாய்வயிற்றுப் பிள்ளைகளாய், தீமைகளைக் களைந்து, நன்மைகளைப் பேசியும், வளர்த்தும், நாளும் உம் வழி நடக்க நல்லருள் செய்வீர் !

இறைவா ! இறைவா ! ! இறைவா ! ! !

# அருட்கொடிப் பாடல்

அருட்கொடி ஓங்குது பாரீர்—நல்ல
அழகிருடிப்பட்டி அணிசெய் நகரில் (அருட்கொடி)
வறுமைகள் நீங்குது பாரீர்—நல்ல
வளமையும் செம்மையும் வளருது பாரீர்
(அருட்கொடி)

கருணை மிகுகுருநாதர்—இந்தக்
காசினி உய்ந்திடக் கனிவுடன் போந்து
அருள்மிகு வேளாண் குடியில்—நன்கு
அவதரித் திட்டதை அவனிக் குரைக்க
(அருட்கொடி)

அருட்சட்ட மாண்பினைத் தேரீர்—அது
அனைவரும் அடைந்திடும் வழியென ஓரீர்
மருள் நீக்கும் வழியிது பாரீர்—இந்த
மாநில மக்களே திரண்டிங்குவாரீர் (அருட்கொடி)

அருட் சட்ட அடியரைக் காணீர்—அவர்
அகங்குழைந் தேஇங் கடைந்திடல் பாரீர்
தெருளுறும் நெறியிது தேரீர்—எந்தத்
தெய்வமும் ஒன்றேயிங் கேஎனல் பாரீர்
(அருட்கொடி)

உயர்ந்தவர் உள்ளத்தைப் போன்றே—நன்கு
ஓங்கியிவ் வாழ்வினைத் தேற்றுதல் பாரீர்
மயர்வுகள் நீக்கிடும் பாரீர்—இந்த
மாநிலத்தில் நல்ல மேன்மையைக் காணீர்
(அருட்கொடி)

இல்லறம் துறவறம் இரண்டும்—இங்கு
இணைந்து ஒன்ருகுதல் இயல்புடன் காணீர்
நல்லற மாவது ஈதே—என்று
நானிலம் அறிந்திட நவிலுதல் காணீர்
(அருட்கொடி)

பரிவுடன் வந்திங் கமர்ந்தே—எந்தம்
பரமசற் குருவின் திருவடி தொழுவீர்
கருவழி நீக்குவ தீதே—என்று
கருணையொ டோதிப் பறக்குது பாரீர்
(அருட்கொடி)

சற்குரு நாமத்தைச் சாற்றி—எங்கும்
பற்பல துயரம் பறந்திடப் போக்கி
எற்புதோ றருளமு தூற்றி—நல்ல
ஏகாந்த நெறிக்கே அழைத்திடல் காணீர்
(அருட்கொடி)

[ஆண்டவர் அருள்]

———

## வாழ்த்து

நல்லருள் புரிந்து மெய்ம்மை நாட்டி இவ்வுலகத்
தென்றும்
புல்லர்கள் இல்லாதுள்ள பொற்புறு தலைமை கண்டு
கல்லினும் வலியர் தாமும் கசிந்துளம் உருகச் செய்து
சொல்லுப தேசம் செய்த தூயவன் வாழி! வாழி!

இரெட்டியப் பட்டி வந்து யாங்கணும் அருள்பரப்பி
அருட்டிற வள்ளலாகும் ஆண்டவன் ஆசி வாழி!
மருட்கெடச் செய்தான் நம்மை மலவழி நீக்கி ஆண்ட
தெருட்டருஞ் செல்வன் நீதி சீர் பெறச் சிறக்க வாழி!

வாழிஇவ்வுலகத் தென்றும் வள்ளல்தன் நியதி
யெல்லாம்!
வாழிஇவ்வுலகில் அன்னோன் வளம்பெறுஅடியார்யாரும்
வாழிஎந் நாளும் மெய்ம்மை! வாழ்க நல்லறங்க
ளெல்லாம்!
வாழிஇப் பெரியோன் நாமம்! வாழியே வாழி வாழி!

வான்முகில் வழாது பெய்க, மலிவளம்சுரக்க, மன்னன்
கோன்முறை அரசு செய்க, குறைவிலா (து) உயிர்கள் வாழ்க,
நான்மறை அறங்கள் ஓங்க, நற்றவம் வேள்வி மல்க,
மேன்மைகொள் சட்ட நீதி விளங்குக உலகமெல்லாம்.

---

## திருப்பல்லாண்டு

செந்தமிழ் நாடுசெய் புண்ணியமாம்குரு
தேவர்க்குப் பல்லாண்டு
மந்த தரர்களை யும்திருத் திடவந்த
மாண்புக்குப் பல்லாண்டு
கந்த மலரொடு கவிமலர் சூழ்குரு
கருணைக்குப் பல்லாண்டு
அந்த மொடாதியில் ஆண்டவர் பேரருள்
ஆட்சிக்குப் பல்லாண்டே.

## திருவடிப் புகழ்ச்சி

"பொன்னார் மேனியனே" என்றபண்.

கல்லாம் என் மனதைக் கரைவித்துக் கருணை செய்யும்
சொல்லால் எண்ணங்களால் தொடற்கரும் தூய்மை நல்கும்
பொல்லார் கட்கும் அருள் பொலிவூட்டிப் புகழ் கொடுக்கும்
நல்லார் கள்பரவும் குருநாதன் திருவடியே.

---

## மங்களம்
### (இங்கிலீஷ் நோட்)

மங்க ளமெனப் பாடுவோம்
 மறைமு தலருள் நாடுவோம்
மடமை யிருளைக் களைந்து மனத்துள்
 மருவு மொளியைத் தேடுவோம் (மங்க)

துங்க ஒளியைக் காணுவோம்
 தூய நெறியைப் பேணுவோம்
சுமுக முடனே சுஜன ருடனே
 சுகுணப் பணியைப் பூணுவோம் (மங்க)

இங்கி தமுடன் வாழுவோம்
 எங்கும் அன்பொடு சூழுவோம்
இயற்கை யையடக் கிடுரெட் டியப்பட்டி
 இருடி யருட்குள் ஆழுவோம் (மங்க)

சங்க மதனில் மேவு வோம்
 சத்யத் துக்கலர் தூவுவோம்
சங்க டமனைத் தும்த விர்த்தருள்
 சாந்திக் கரைக்குத் தாவுவோம் (மங்க)

ஓம் ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகளுக்கு
அரோஹரா
ஓம் ஸ்ரீ பரிபூர்ண விநாயகமூர்த்திக்கு அரோஹரா
ஓம் ஸ்ரீ அருட்சக்தி அன்னை அவர்களுக்கு அரோ ஹரா
ஓம் ஸ்ரீ அருட்கொடி சுவாமிகளுக்கு அரோஹரா
ஓம் ஸ்ரீ சற்குரு மகராஜ்கி ஜெய்!

என ஓதி முடிந்தவுடன், அனைவரும் சிரம், செவி இரண்டு, முகவாய், தோள் இரண்டு, முழந்தாள் இரண்டு ஆகிய எட்டு அங்கங்களும் பூமியில் படிய, சாஷ்டாங்க நமஸ்காரம் செய்து வணங்கி எழுந்து,

திருநீறு தீர்த்தம் பெற்றுக்கொண்டபின், ஆண்டவர்க்கு நைவேத்தியம் செய்த பிரசாதத்தை அருந்த வேண்டும். அருந்து முன், "குருநாதா! தங்களுக்கு நைவேத்தியம் செய்த பிரசாதத்தை அருந்துகிறேன். என்னுள் உள்ள தீயசக்திகளை ஒடுக்கி, அருள் நிலையில் உயரும் வண்ணம் தூய சக்திகளைத் தூண்டுமாறு தாங்கள் அருள்புரிய வேண்டும்" என்று உளமுருகிப் பிரார்த்திக்க வேண்டும்.

---

## பிரார்த்தனை-3

எங்கும் நிறைந்த ஆனந்த மயமே; எல்லா உயிர்களையும் ஆட்டுவிக்கும் கருணைக்கடலே! யாங்கள் செய்த இச்சிறுபூசையில், ஏதேனும் தவறுகள் இருப்பின், மன்னித்தருளி, எங்கள் இல்லமும், எல்லா அடியார்களின் இல்லங்களும், எல்லா உலகிலும் வாழ்கின்ற எல்லா உயிர்களும், தீமை நீங்கி, நன்மை பெருகி ஓங்கி வாழ அருள் செய்வீராக!

யாங்கள் உங்கள் அடிமை

யாங்கள் உங்கள் அடிமை

யாங்கள் உங்கள் அடிமை.

# ஸத்குரு நாமாவளி

(1)

ஹர ஹரோ ஹரா ஸ்வாமி ஹர ஹரோ ஹரா
ஹர ஹரோ ஹரா ஸ்வாமி ஹர ஹரோ ஹரா

இரெட்டியப்பட்டி ஸ்வாமிகட்கு ஹர ஹரோ ஹரா
எங்கள் குரு நாதருக்கு ஹர ஹரோ ஹரா

ஹர ஹரோ ஹரா ஸ்வாமி ஹர ஹரோ ஹரா
ஹர ஹரோ ஹரா ஸ்வாமி ஹர ஹரோ ஹரா

அருள் வடிவாய் வந்தவர்க்கு ஹர ஹரோ ஹரா
ஆதரவாய்த் திகழ்பவர்க்கு ஹர ஹரோ ஹரா
இன்பமெல்லாம் நல்குவோர்க்கு ஹர ஹரோ ஹரா
ஈடணைகள் தீர்ப்பவர்க்கு ஹர ஹரோ ஹரா

உண்மையெல்லாம் உரைப்பவர்க்கு
ஹர ஹரோ ஹரா
ஊக்கம்மிகத் தருபவர்க்கு ஹர ஹரோ ஹரா
என்னுளத்தும் இருப்பவர்க்கு ஹர ஹரோ ஹரா
ஏகநெறி தந்தவர்க்கு ஹர ஹரோ ஹரா

ஐயமெல்லாம் தவிர்ப்பவர்க்கு ஹர ஹரோ ஹரா
ஒப்பில் சட்டம் வகுத்தவர்க்கு ஹர ஹரோ ஹரா
ஓமொலியில் கலந்தவர்க்கு ஹர ஹரோ ஹரா
ஔதார்ய சீலருக்கு ஹர ஹரோ ஹரா

ஹர ஹரோ ஹரா ஸ்வாமி ஹர ஹரோ ஹரா.

(2)

தேவர் தேவ சத்குரு மூவர் தேவ சத்குரு
ஜீவ தேவ சத்குரு ஓம் ஓம் ஓம்
தேவ தேவ சத்குரு தேவ தேவ சத்குரு
தேவ தேவ சத்குரு ஓம் ஓம் ஓம்

தேவ கான சத்குரு பாவநாச சத்குரு
ஜீவ தேவ சத்குரு ஓம் ஓம் ஓம்
தேவ தேவ சத்குரு தேவ தேவ சத்குரு
தேவ தேவ சத்குரு ஓம் ஓம் ஓம்

அன்பு மிஞ்சும் சத்குரு அருள் வழங்கும் சத்குரு
அமுத மான சத்குரு ஓம் ஓம் ஓம்
இன்பம் நல்கும் சத்குரு எங்கும் மேவும் சத்குரு
என்றும் வாழும் சத்குரு ஓம் ஓம் ஓம்

வாய்மைமேவும் சத்குரு தூய்மை நல்கும் சத்குரு
மாண்பு சான்ற சத்குரு ஓம் ஓம் ஓம்
தாய்மை மேவும் சத்குரு மேன்மை நல்கும் சத்குரு
சாந்தசீல சத்குரு ஓம் ஓம் ஓம்

ஊனம் நீக்கும் சத்குரு ஞானமூட்டும் சத்குரு
ஊழை மாற்றும் சத்குரு ஓம் ஓம் ஓம்
மோனம் காட்டும் சத்குரு த்யானம் கூட்டும் சத்குரு
மூலமந்த்ர சத்குரு ஓம் ஓம் ஓம்

இஷ்ட மூட்டும் சத்குரு கஷ்டம் நீக்கும் சத்குரு
நிஷ்டை கூட்டும் சத்குரு ஓம் ஓம் ஓம்
அஷ்ட மூர்த்தி சத்குரு அர்த்தம் சாஸ்த்ரம் சத்குரு
ஐக்ய ஸூத்ரம் சத்குரு ஓம் ஓம் ஓம்

பூதம் ஐந்தும் சத்குரு போகம் யாவும் சத்குரு
போத கார்ய சத்குரு ஓம் ஓம் ஓம்
வேத கானம் சத்குரு நாதமூலம் சத்குரு
வ்யோம ஜோதி சத்குரு ஓம் ஓம் ஓம்

நாம ஜோதி சத்குரு நாத ஜோதி சத்குரு,
ஞான ஜோதி சத்குரு ஓம் ஓம் ஓம்
ஏமஜோதி சத்குரு சோம ஜோதி சத்குரு
ஏக ஜோதி சத்குரு ஓம் ஓம் ஓம்.

(3)

குருநாதா ஓம் குருநாதா—ஜெய
குருநாதா சத் குருநாதா
குருநாதா அருட் குருநாதா—தவ
குருநாதா சிவ குருநாதா

அருளை வளர்க்கும் குருநாதா—எம
தறிவை விளக்கும் குருநாதா
கருணை சிறக்கும் குருநாதா—மனக்
கதவைத் திறக்கும் குருநாதா

கருவழி நீக்கும் குருநாதா—உயர்
கடமையைச் சாற்றும் குருநாதா
ஒருவழி காட்டும் குருநாதா—எமக்
குறுதுயர் தீர்க்கும் குருநாதா

தேவை குறைக்கும் குருநாதா —அருட்
சேவை நிறைக்கும் குருநாதா
பூவை யுகக்கும் குருநாதா —உளப்
பூவை யலர்த்தும் குருநாதா

பத்தி புகட்டும் குருநாதா —நிறை
சத்தி யளிக்கும் குருநாதா
சித்தி பழுக்கும் குருநாதா —பர
முத்தி கொடுக்கும் குருநாதா (குருநாதா)

(4)

சத்குரு சிவகுரு சச்சிதானந்த குரு
சித்குரு ஜெயகுரு சின்மயானந்த குரு

ரெட்டியப்பட்டிகுரு கிட்டியே வந்த குரு
சட்டம் வகுத்தகுரு திட்டம் உரைத்தகுரு (சத்)

குறையை அகற்றுகுரு நெறியைப் புகட்டுகுரு
மறையை விளக்குகுரு மனதைத் திருத்துகுரு (சத்)

திருத்தம் அளித்தகுரு பொருத்தம் பிணைத்தகுரு
வருத்தம் தவிர்த்தகுரு கருத்தில் நிலைத்தகுரு (சத்)

கலையை யுணர்த்திஅருள் நிலையைப் புணர்த்துகுரு
புலையைத் தவிர்த்துமன அலையை நிறுத்து குரு. (சத்)

(வேறு)

சச்சிதானந்தம் சத்குரு ஸ்வரூபம்
சச்சிதானந்தம் சத்குரு கடாக்ஷம்
சச்சிதானந்தம் சத்குரு சங்கீர்த்தனம்
சச்சிதானந்தம் சத்குரு ப்ரஸாதம்,

சச்சிதானந்தம் சச்சிதானந்தம்
நித்தியானந்தம் சச்சிதானந்தம்
சச்சிதானந்தம் சச்சிதானந்தம்
அற்புதானந்தம் சச்சிதானந்தம்.

அத்வயானந்தம் சச்சிதானந்தம்
சித்பவானந்தம் சச்சிதானந்தம்
தற்பரானந்தம் சச்சிதானந்தம்
மெய்ச்சிவானந்தம் சச்சிதானந்தம்.

சச்சிதானந்தம் சச்சிதானந்தம்
சச்சிதானந்தம் சச்சிதானந்தம்
சச்சிதானந்தம் சச்சிதானந்தம்
சச்சிதானந்தம் சச்சிதானந்தம்

(5)

சத்குரு நாமம் பாடுவோம்
சத்குரு பாதம் சூடுவோம்
சத்குரு சேவை நாடுவோம்
சத்குரு பக்தரைக் கூடுவோம்.

சத்குரு சட்டம் பேணுவோம்
சத்குரு கோலம் காணுவோம்
சத்குரு பக்தி பூணுவோம்
சத்குரு வைநினைந் தாடுவோம்

சத்குரு சிந்தனை நல்லதாம்
சர்வநலம்தர வல்லதாம்
சத்குரு கீர்த்தனம் நல்லதாம்
சாந்த சுகம்தர வல்லதாம்.

சத்குரு தரிசனம் சௌபாக்கியம்
சத்குரு கீர்த்தனம் சுகக்ஷேமம்
சத்குரு சேவை தவயோகம்
சத்குரு த்யானம் சிவபோகம்.

## அருட்சட்டம் ஏற்றுக்கொள்ளும் முறை:-

சுவாமிகளின் அருட்சட்டத்தைப் புதிதாக மேற்கொள்ள விரும்புவோர், "அருளே வடிவாம் சற்குரு மூர்த்தியே! தாங்கள் அருளியுள்ள அருட்சட்டச் செந்நெறியைத் தங்கள் திருவருள் துணைகொண்டு பேணிப் பயன்பெற விழைந்து, இந்நன்னாளில்

தொடங்குகின்றேன். எந்நிலையிலும், எல்லா இடத்திலும் தாங்கள் வழித்துணையாக இருந்து இன்று அடியேன் ஏற்றுக்கொள்ளும் இச்சட்டநெறியை என் ஆயுள் வரை உறுதியுடன் கடைப்பிடித்து ஒழுகி பிறவா பெருநிலையை அடைய அருள்புரிவீராக! என்உடல், பொருள், ஆவி மூன்றையும் உம் திருவடி மலர்களில் சமர்ப்பிக்கின்றேன்'' என்று உருக்கத்துடன் பிரார்த்தித்துக் கொண்டு அருட்சட்ட அனுட்டானம் தொடங்க வேண்டும்.

விடியல் 4 மணிக்கு நீராட வேண்டும். நீரில் ஆண்டவர் திருநீறு சிறிது இட்டு அவரது அருள்வந்து அந்நீரில் படிவதுபோன்ற எண்ணத்துடன் பச்சைத் தண்ணீரில் தலையும் நனைய நீராடவேண்டும்.

நீராடியதும் திருநீறு அணிந்துகொண்டு விநாயகர் கோயிலை மும்முறை வலம் வந்து மனமுருகி வழிபட வேண்டும். (எந்த மதத்தினராயினும் தத்தமக்குரிய வழக்கப்படி வழிபாடு செய்யலாம்). தண்ணீரில் திரு நீறும் துளசியும் இட்ட தீர்த்தம் உள்ளுக்குப் பருக வேண்டும்.

தொடங்கும் போது, ஆண்டவர் சந்நிதிக்குச் சென்றோ அருட்சட்ட நெறியில் சிறந்த அடியார்கள் இருப்பிடம் சென்றோ அவர்களின் அருளாசிகளைத் துணைகொண்டு தொடங்குவது சிறப்புடையதாகும்.

அத்தகைய வாய்ப்பு கிட்டாதவர்கள் ஆண்டவர் எங்கும் நிறைந்துள்ளார் என்ற திடநம்பிக்கையுடன் தம் இருப்பிடத்திலிருந்தே சட்ட அனுட்டானம் மேற் கொள்ளலாம். உள்ளத்தில் திடமான உறுதியுடன், நெறிதவறாமல் நடந்தால், நிச்சயமாக முழுப்பயன் பெறலாம்,

## குருநாதர் வழிபாடு

குருநாதர் திருவுருவப் படத்தை வீட்டில் அமைத்து வழிபட விரும்புவோர் அவ்வாறு செய்ய லாம். திருவுருவப் படத்தின் தலைப்பில் உள்ள வளையத்தை ஆணியில் மாட்டித் தொங்கவிடக் கூடாது. சுவரில் ஒரு சட்டத்தைப் பொருத்தி, அதன்மீது ஆண்டவரை எழுந்தருளச் செய்து, மலர் சூட்டி அர்ச்சனை, ஆராதனை செய்து வழிபடவேண்டும் தினந்தோறும் ஒருவேளையாவது அன்னநைவேத்தியம் செய்வது அவசியம். (பச்சரிசிச் சாதம் படைப்பது சிறப்புடையது) ஆண்டவர் படத்திற்குமேல் வேறு எந்தப்படமும் இருக்கக் கூடாது.

தினந்தோறும் காலை, மாலை இருவேளையும் பழம் கற்கண்டு, வெல்லம் முதலிய வைத்துப் படைக்கலாம். காலையில் தயிரும், மாலையில் பாலும் படைப்பது சிறப்புடைத்தாகும். வீட்டில் எவ்வுணவு தயாரிப் பினும், ஆண்டவர்க்கு நைவேத்தியம் செய்து, அவருடைய பிரசாதமாக உட்கொள்வது இகபர நலங்களைக் கூட்டுவிக்கும்.

குருநாதர் அவதாரம் புரிந்த புரட்டாசி ரேவதி நன்னாளிலும், மார்கழி அனுடம்-குருபூஜை விழா நாளிலும், சிறப்பு வழிபாடாற்றி, இயன்ற அளவு அன்னதானம் செய்து, அருட்பாடல் பாராயணம் செய்வது நலம்.

## கொலு அமர்த்துதல்

ஆண்டவர் நேராக எழுந்தருளி, ஆசனத்தமர்ந்து, அருள்புரிவதாகக் கருதி, சிறப்பு வழிபாடாற்றி, மனமுருகிப் பிரார்த்தித்து. முழு நலம் பெறுவதே கொலு அமர்த்துவதன் நோக்கமாகும்.

திங்கள், புதன், வெள்ளி, ரேவதி, சதுர்த்தி நாட்களில் கொலு அமர்த்தலாம். தங்கள் வீட்டில் தனியான, சிறப்பான, மறைவான இடத்தில் கொலு அமர்த்துதல் வேண்டும்.

கொலு அமர்த்துவதற்கு உரிய இடத்தைத் தூய்மை செய்து, மெழுகிக் கோலமிட்டு, குத்துவிளக்கேற்றி வைத்து, நாற்காலி ஒன்றைக் கழுவித் துடைத்து, அமைத்து, புதிய வஸ்திரம் ஒன்றை அதன் மீது இட்டு, ஆண்டவர் திருவுருவப் படத்தை அசைவுரு வண்ணம் எழுந்தருளச் செய்யவேண்டும். நாற்காலிக்கு எதிரில் ஒரு சிறிய மணைப்பலகையைக் கழுவித் துடைத்து, அமைத்து, அதில் ஆண்டவர் திருவடி இரண்டும் அமைந்திருப்பதுபோலக் கோலம் அமைக்கவேண்டும். மலர்சூட்டி, அர்ச்சனை புரிந்து, தூப தீபம் காட்டி, தேங்காய் பழம் வெற்றிலை பாக்கு அன்னம் நைவேத்தியம் செய்து, துதிப்பாடல் பாடி, நாள்தோறும் காலை மாலை வழிபாடு ஆற்றவேண்டும்.

வீட்டில் விநாயகர் வைத்து வழிபடும் பழக்கம் உடையோர் அம்மூர்த்தியையும் குருநாதருடன் கொலுவில் எழுந்தருளச் செய்யலாம். விநாயகர் திருவுரு கற்சிலை ஆயின், நாளும் காலையில் திருமஞ்சனம் செய்யவேண்டும் உலோகச்சிலை ஆயின் வெள்ளிக்கிழமை, இரேவதி, சதுர்த்தி முதலிய விசேட நாட்களில் திருமஞ்சனம் செய்தால் போதும். வழக்கம் போல் மற்ற பூசனைகள் நாள்தோறும் செய்ய வேண்டும்.

நோயுற்றவரையோ, மகப்பேறு பெற்றவரையோ, 3, 5,7, 9, 11 என்ற முறையில் இயலும் அளவு வலம் புரிந்து வணங்கி திருநீறு தீர்த்தம் பருகச் செய்யவேண்டும்.

அவர்கள் எழுந்து வலம் புரிய இயலாவிடில், அவர்களுக்குப் பதிலாக மற்றொருவர் நீராடி நியமத்

துடன் வலம்புரிந்து வணங்கி வழிபட்டு, அவர்களுக்குத் திருநீறு தீர்த்தம் தரலாம். ஆண்டவர் திருநாம மனனம், அருட்பாடல் பாராயணம் இவை செய்ய லாம். நிச்சயம் முழுப்பயன் பெறலாம்.

கொலு அமர்த்துவதற்கென்று தனியாக ஆண்டவர் படம் ஒன்றைப் பூஜையில் வைத்துக் கொள்வது நல்லது.

9 அல்லது 11 நாட்கள் கொலு அமர்த்துதல் வேண்டும். இடையில் நோய் குணமானாலும், கோரிய பயன் கை கூடினாலும், நாம் எண்ணி அமர்த்திய நாள் வரை, கொலுவை வைத்திருக்க வேண்டும். குறிப் பிட்ட நாட்களுக்குள் நோய் குணமாகவில்லை என்றா லோ, எண்ணிய செயல் கைகூடவில்லை என்றாலோ, அவை நிறைவேறும் வரை கொலுவை வைத்திருக்க வேண்டும்.

செவ்வாய், வெள்ளி, ஞாயிறு இம்மூன்று நாட் களில் எதிலும் கொலுவைப் பூர்த்தி செய்தலாகாது. குறிப்பிட்ட கால அளவு முடியும் நாள் ஷ மூன்று கிழமைகளில் வந்தால், அதற்கு அடுத்த நாள் பூர்த்தி செய்யவேண்டும். பூர்த்தி செய்யும் நாளில் சர்க்கரைப் பொங்கல் நிவேதனம் செய்து, பிரசாதம் ஏற்றுக் கொண்டு, வயிறு குளிர்ந்த பிறகே கொலுவைப் பூர்த்தி செய்யவேண்டும்.*

*மேலும் விளக்கம் பெற வேண்டுவோர், அனுபவம்மிக்க சிறந்த அடியார்களிடம் கேட்டுத் தெரிந்துக் கொள்ளலாம்.

## ஸஹஸ்ர நாம அர்ச்சனை

அருட்சட்ட அடியவர்களுக்கு வெள்ளிக்கிழமையைச் சிறப்பான நாளாக ஆண்டவர் குறிப்பிட்டிருப்பதால், வெள்ளிக்கிழமை தோறும், குருநாதருக்கு ஸ்ஹஸ்ர (1008) நாம அர்ச்சனை செய்து வழிபடுவது, சிறந்ததாகும். சுவாமிகளின் அவதார நாள் இரேவதி விண்மீன் ஆதலால், மாதந்தோறும் இரேவதி நன்னாளில் ஸஹஸ்ர நாம அர்ச்சனை செய்வதும் நலமாகும். குருநாதர் ஸஹஸ்ர நாமம் புத்தகம் தனியாக அச்சாகியுள்ளது. இரெட்டியப்பட்டியில் குருநாதர் திருக்கோயிலில் பெற்றுக் கொள்ளலாம்.

ஷை புத்தகம் கிடைக்கும் வரை, இப்புத்தகத்திலுள்ள குருநாதரின் 108 திருநாமங்களையே பத்து முறை ஓதி ஸஹஸ்ரநாம அர்ச்சனை நடத்தலாம்.

## செய்யும் முறை

நீராடி ஈரஉடையுடன் செய்வது சிறப்புடையது. நித்திய வழிபாட்டை முடித்து, மலர்கள் அல்லது அட்சதை கொண்டு அர்ச்சனை நடத்தவேண்டும். தேங்காய், பழம், சர்க்கரைப் பொங்கல், வடை வைத்து நைவேத்தியம் செய்ய வேண்டும். மங்களம் பாடுகையில் ஒருதட்டில் குங்குமம் கரைத்து கர்ப்பூரம் பொருத்தி ஆரத்தி எடுக்க வேண்டும்.

## லக்ஷார்ச்சனை

அருட்சட்ட அடியவர்கள் ஆண்டுக்கொரு முறை குருநாதருக்கு லக்ஷார்ச்சனை நிகழ்த்துவது சிறப்புடையது. வீட்டில், திருமணம், பிறந்தநாள் விழா, கிருஹப்பிரவேசம் முதலிய விசேடங்கள் நடைபெறுகையில் ஆண்டவருக்கு லக்ஷார்ச்சனை செய்வது நலம்.

## செய்யும் முறை

நீராடி ஈர உடையுடன் செய்வது சிறந்தது. ஸஹஸ்ரநாம அர்ச்சனை புத்தகத்திலுள்ள திருநாமங்களை நூறுமுறை ஓதி லக்ஷார்ச்சனை செய்யலாம். அல்லது 108 திருநாமங்களை ஆயிரம் முறை ஓதியும் லக்ஷார்ச்சனை செய்யலாம். தங்கள் குடும்பத்திலுள்ள பலரும் கலந்து செய்யலாம். சுற்றுப்புறத்திலுள்ள அடியார்களை உடன் கொண்டும் செய்யலாம்.

ஒரு நாளில் பலபேர் இருந்து, காலை மாலை செய்யலாம். அல்லது பல நாளில் தொடர்ந்து செய்து முடிக்கலாம்.

## அர்ச்சனை செய்வோர் அமரும் முறை

சுவாமிக்கு அருகில் இருபுறமும் இருவர் இருந்து மலர் தூவி அர்ச்சிக்கலாம். மற்றவர்கள் சுவாமிக்கு எதிரில் இருபுறமும் வரிசையாக அமர்ந்து, மலர்க் கூடையை இடதுகையில் தாங்கிய வண்ணம், வலது கையால் ஒவ்வொரு திருநாமத்திற்கும் ஒவ்வொரு மலராக எடுத்து சுவாமிக்கு அர்ப்பணித்து, எதிரில் அமைந்துள்ள இலையில் இட வேண்டும். பூசை முடிந்த பிறகு, அர்ச்சனை செய்யப்பெற்ற மலர்களைச் சேகரித்து, ஆண்டவர் திருவடியில் சமர்ப்பிக்க வேண்டும்

1, 3, 5, 9 என்ற முறையில் ஒற்றைப் படையான எண்ணில் அன்பர்கள் அமர்ந்து செய்தல் வேண்டும். அர்ச்சனைசெய்பவர்கள் அர்ச்சனை பூர்த்தியாவதற்குள் பேசுவதோ, இடையில் எழுந்து செல்வதோ கூடாது, ஆண்டவர் சிந்தனையுடன் அன்போடும், உருக்கத்தோடும் அர்ச்சனை புரிவது நற்பயனைத் தரும்.

## குறிப்பு

பூஜைக்கு ஆகக்கூடிய மணமுள்ள மலர்களைக் கொண்டும், துளசி, வில்வம், வன்னி, அறுகு முதலிய பத்திரங்களைக் கொண்டும், மஞ்சள் அல்லது குங்குமத்தை நெய்விட்டுக் கலந்த முனை முறியாத பச்சரிசியைக் கொண்டு தயாரிக்கப் பெற்ற அட்சதையைக் கொண்டும் அர்ச்சனை செய்யலாம். துலுக்கசாமந்தி (கேந்தி) முதலிய பூஜைக்காகாத மலர்களைப் பயன் படுத்தக் கூடாது.

அர்ச்சனை தொடங்கும் முன், மலர்களைக் கவனமாக ஆய்ந்து வைத்துக் கொள்ள வேண்டும். பூச்சிக் கூடு உள்ளவை, பின்னப்பட்டவை, அழுகியவை முதலியவற்றை நீக்கி விட வேண்டும். அர்ச்சனை செய்கையில் இடையில் மலர்கள் தீர்ந்து விட்டால், அட்சதையைப் பயன் படுத்திக் கொள்ளலாம்.

அர்ச்சனை செய்பவர்கள், வெளியில் எங்கும் செல்லாமல் அர்ச்சனை செய்யும் இல்லத்திலேயே தங்கி, நல்லடியார் கூட்டத்தோடு, ஆண்டவர் திரு நாமமனனம், அருட்பாடல் பாராயணம், தியானம், முதலிய செய்து வந்தால் முழுப்பயன் பெறலாம்.

ஒவ்வொரு வேளையும் அன்னம், தேங்காய், பழம் நைவேத்தியம் செய்வது அவசியம். தொடங்கும் நாளிலும், பூர்த்தி செய்யும் நாளிலும் சர்க்கரைப் பொங்கல் நைவேத்தியம் செய்யவேண்டும். மற்ற நாட்களில் தினமும் ஒரு வகை சித்ரான்னம் நைவேத்தியம் செய்யலாம். அர்ச்சனை செய்யும் அடியவர்களுக்கும் உணவு படைப்பது அவசியம்-

அர்ச்சனை செய்வதால் ஆண்டவனைப் பூசித்த பலனும், அடியார்களுக்கு உணவிடுதல் முதலிய

உபசாரங்கள் புரிவதால் அடியார்களைப் பூசித்த பலனும் ஒருங்கே கிடைப்பதால், லக்ஷார்ச்சனை செய்யும் செயல் மிக்க சிறப்புடையது.

செவ்வாய், வெள்ளி, ஞாயிறு ஆகிய நாட்களில் பூர்த்தி செய்தல் கூடாது. அடுத்த நாளும் தொடர்ந்து செய்து முடிக்க வேண்டும். லக்ஷார்ச்சனை பூர்த்தி செய்யும் நாளில், சர்க்கரை பொங்கல், வடை, நைவேத்தியம் செய்து, தேங்காய் மீது கர்ப்பூரம் பொருத்தி திருஷ்டி சுற்றி, தெருவில் கொண்டு சென்று சூரையிடல் வேண்டும். பின்னர் ஆண்டவர் பிரசாதத்தை அனைவரும் உண்டு அருள் பெறலாம்.

## இரெட்டியப்பட்டித் திருத்தலம்

குருநாதர் அவதாரம் செய்ததும், திருக்கோயில் கொண்டெழுந்தருளி யுள்ளதுமான இரெட்டியப் பட்டித்திருத்தலம், மதுரையிலிருந்து (அறுப்புக் கோட்டை புதூர் வழியாகச் சென்றால்) 52 மைல் தொலைவிலும் கோவில் பட்டியிலிருந்து (எட்டையா புரம், விளாத்தி குளம் வழியாகச் சென்றால்) 28 மைல் தொலைவிலும் உள்ள நாகலாபுரத்திற்குக் கிழக்கே அரைமைல் தொலைவில் அமைந்துள்ளது.

## திருக்கோயில்

சுவாமிகள் திருக்கோயிலில் குருநாதர்மூலஸ்தான மூர்த்தியும், உத்ஸவ மூர்த்தியும் விநாயகர்மூலஸ்தான மூர்த்தியும், உத்ஸவ மூர்த்தியும் உள்ளனர்.

நாள் தோறும் மூன்றுகால பூசையும் வெள்ளிக் கிழமை, இரேவதி முதலிய விசேட நாட்களில் சிறப்பு வழிபாடும் நடைபெறுகின்றன,

ஆண்டு தோறும் மார்கழி மாதம் அனுடவிண் மீனில் அடியவர்கள் அன்பர்கள் பலரும் திரளாகவந்து **குருபூஜை விழா**வைச் சிறப்பான முறையில் நடத்து கின்றனர். திருமஞ்சனம், திருவீதியுலா, அன்னதானம் முதலியனயாவும் இனிது நடைபெறுகின்றன.

புரட்டாசிமீ இரேவதி விண்மீனில் நடைபெறும் **ஜயந்தி விழா**வில் காலையில் அன்னுபிஷேகமும், இரவில் திருவீதியுலாவும் சிறப்பாக நடக்கின்றன.

சித்திரை மாதம் மூன்ருவது வெள்ளிக்கிழமை யன்று **வசந்த விழா** இனிது நடைபெறுகின்றது. காலையில் மூலஸ்தான மூர்த்திக்கு சங்காபிஷேகமும், மாலையில் உத்ஸவ மூர்த்திக்குப் பூப்பந்தல் அலங்கார மும், செயற்கைத் தாமரைக்குள அமைப்பும், சிறப்பு வழிபாடும் இனிது நடைபெறுகின்றன.

அடியார் பெருமக்கள் பலரால், அடியார்கள் பயன்படுத்திக் கொண்டு நலம் பெறச் சத்திரங்களும் தியான மண்டபமும், நூல் நிலையமும் கட்டப்பெற்று இருக்கின்றன.

## அடியார் உறவு

அருட்சட்டம் ஏற்று நடக்கும் அடியார்கள் பல இனத்தவர், பலமதத்தவர், பல விதமான பழக்க வழக்கம் உடையவர்கள் ஆனுலும், சட்டம் ஏற்றுக் கொண்ட பின், ஓரினத்தவராய் ஒற்றுமையாய் வழிபாடு ஆற்றிப் பழகும் அருமை காணக் காணப் பேரின்பந்தரும், சுவாமிகள் அடியார்களுக்குக் கூறும் நல்லுரைகள் பலவற்றுள், "அடியார்கள் எந்த ஊருக்குச் சென்ருலும், அந்த ஊரில் உள்ள சட்ட அடியார்கள் இல்லத்திற்கு முதலில் செல்ல வேண்டும். அடியார்கள் அடிக்கடி கலந்து உறவாடுதல் வேண்டும்,

நேரில் காண இயலாத நேரங்களில் கடிதம் மூலமாவது தொடர்பு கொள்ள வேண்டும்'' என்பதும் ஒன்றாகும்.

சட்ட நெறியில் சிறந்த அநுபவ முள்ள அடியவர்களின் இல்லங்களுக்குச் சுற்றுப்புற முள்ள அடியவர்கள் வாரம் ஒரு முறையோ அல்லது மாதம் ஒரு முறையோ சென்று கூடி, ஆண்டவர் வரலாறு, அருட் பாடல்கள் பாராயணம் செய்தல். தியானம் செய்தல், அருட் சட்டச் சம்பந்தமாக உள்ள ஐயங்களைக் கூறி விளக்கம் காணுதல் முதலியன செய்தல் அடியார்களுக்குப் பெரும்பயன் அளிக்கும்.

கற்பகோடி காலமாக இருளில் மூழ்கிக் கிடந்த ஒருவன், பேரொளி ஒன்றைப் பெற்று, தன் நிலையையறிந்து, நாணி, அழுக்குகளைப் போக்கி, தூய்மையடைந்து தன் தலைவனிடம் சென்று சேர வேண்டும். அஃதன்றி தன் மீது பட்ட ஒளி எங்கிருந்து தோன்றுகின்றது? அதன் மூலம் யாது? என்பதை ஆராய முற்படுவது அறியாமை. தனக்கு வேண்டிய ஜீவன் முத்தி நிலையை அடைவதற்கு நிலையாமையின் திண்மையை உணர்ந்து நிலைத்த பொருளை நாடுகின்ற சித்தத்தின் தெளிவு ஏற்பட்டால் அதுவே போதுமானது.



## கோடி அர்ச்சனை விழா

16-2-1977ல் என்மனைவி திருமதி சாந்தகுமாரியின் கனவில் கோடி அர்ச்சனை நிகழ்த்துமாறு ஆண்டவர் உத்தரவு கிடைத்தது. எவ்வாறு நிகழ்த்துவது எனத் திகைத்தோம். நன்முக நடக்கும் என ஆண்டவரின் அருட்குறிப்பு நிகழ்ந்தது.

உடனே பிள்ளையார் குப்பம் சென்று ஸ்ரீலஸ்ரீ அருட்சக்தி அன்னை அவர்களிடம் கூறினேம். இரண்டு அதிசயங்கள் நடக்கப் போகின்றன. அவற்றுள் இது ஒன்று எனக்கூறிய அவர்கள் பிள்ளையார் கோயில் பிரசாதத்தோடு கோடி அர்ச்சனைக்கு மூலதனமாகப் பொருளும் கொடுத்து, தாம் உடனிருந்து நடத்துவதாக ஆசியருளினர்.

அன்றுமுதல் விரதம் இருந்தோம். கோடி அர்ச்சனைக்காக ஆட்சிமொழிக் காவலர் அருள்திரு. கீ. இராமலிங்கனுர் அவர்களைத் தலைவராகவும், அடிமையைச் செயலராகவும் கொண்ட குழு ஒன்று அமைக்கப்பெற்றது.

சென்னை ஸ்ரீ கன்னிகா பரமேஸ்வரி கோயிலைச் சார்ந்த சேஷாசலம் அரங்கில் 1-5-77 முதல், 16-5-77 வரை திருவருளால் கோடி அர்ச்சனை இனிது நடைபெற்றது.

முதல் நாள் இரவு மங்கள வாத்தியத்துடன், பஜனை கோஷ்டியுடன் இதற்கென புதியதாக தயாரிக்கப்பெற்ற ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் திருவுருவப் படத்தை ஒருவிமானத்தில் திருவீதி உலாவாகக் கொண்டு சென்று சேஷாசலம் அரங்கில் இதற்கெனச் சிறப்பாக அமைக்கப்பெற்ற திருமண மண்டபத்தில் எழுந்தருளச் செய்தோம்.

விநாயகர், ஸ்ரீ அருள்சக்தி அன்னையார் திருவுருப் படங்களையும், விநாயகர் சிலா மூர்த்தியையும் எழுந்தருளச் செய்தோம்.

பலர் அமர்ந்து அர்ச்சனைபுரியத்தக்க முறையில் விசாலமாகஅவ்வரங்கம் அமைந்திருந்தது. வெளியூரில் இருந்து வந்து கலந்து கொண்டவர்கள் அங்கேயே தங்க வேண்டிய வசதிகள் செய்துதந்தோம்.

அர்ச்சனை நடந்த 16 நாட்களிலும்' தினம் அதிகாலை 3 மணிக்கு அடியவர் அன்பர் அனைவரும் நீராடி, நியமத்துடன் அர்ச்சனை புரிய அணிஅணியாய் அமருவார்கள். அபிஷேக ஆராதனைக்குப் பின், தூய்மை செய்யப் பெற்ற மலர்கள் அனைவருக்கும் வழங்கப்பெறும். சில அடியவர்கள் ஒலிபெருக்கிமுன் அமர்ந்து, குருநாதரின் ஸஹஸ்ரநாமங்களை ஒவ்வொன்றாக ஓதுவர். அனைவரும் போற்றி, எனக்கூறி எதிரில், இடப்பெற்றுள்ள இலைகளில் மலர்களைச் சமர்ப்பிப்பர்.

அர்ச்சிக்கப்பெற்ற மலர்கள் ஒருங்கு சேகரிக்கப் பெற்று, ஆண்டவர் திருவடியில் சமர்ப்பிக்கப்பெறும். நைவேத்தியம் ஆனதும் திருநீறு தீர்த்தம் வழங்கி, அடியவர் அன்பர்கட்கு உணவளிக்கப்பெறும்.

பிற்பகல் 3 மணிக்கு அனைவரும் நீராடி முறைப்படி அமர்ந்து அர்ச்சனை நிகழ்த்துவர். ஆராதனைக்குப் பின், பஜனை, சொற்பொழிவுகள், பரத நாட்டியம் கும்மி, கோலாட்டம் முதலிய அருள் நிகழ்ச்சிகள் நடைபெறும். பின்னர் அனைவர்க்கும் உணவு வழங்கப் பெறும்.

இவ் அர்ச்சனை விழாவிற்கு அடியவர் அன்பர்கள் பலரும் பணமாகவும், பிற பொருள்களாகவும் கொடுத்து உதவி புரிந்தனர்.

மக்கள் பலர் நாள்தோறும் திரளாகவந்து, இப் பெருவிழாவினைக் கண்டு களித்து, அருட்பேறு பெற்றனர்.

உலகம் க்ஷேமம் அடையவேண்டும். இதில் கலந்துகொள்வோர் இம்மை மறுமை நலங்கள் யாவும் பெற்று அருள்வாழ்வாற்ற வேண்டும் என்று பிரார்த்தித்து, இவ்அர்ச்சனை வைபவம் நிகழ்த்தப் பெற்றது.

இந்து தியலாஜிகல் உயர்நிலைப் பள்ளி மாணவர் பலர் அன்புடன் கலந்துகொண்டு சிறந்த முறையில் தொண்டாற்றினர்.

ஒரு ஆசிரமத்திலிருந்து 50 மாணவிகளும் இரண்டு ஆசிரியைகளும் பங்கெடுத்துக் கொண்டமை குறிப் பிடத்தக்கது.

அர்ச்சனை பூர்த்தியானபின் குருநாதர் முதலிய திருவுருவப் படங்களையும், விநாயக மூர்த்தியையும், மயிலாப்பூரிலுள்ள எங்கள் இல்லத்திற்குக் கொண்டு சென்றோம். ஸ்ரீதாய் அவர்களும் மற்றும் அடியவர் பலரும் எங்கள் இல்லத்திற்கு வந்து ஆசி கூறினர்.

இவ்வாறு கோடி அர்ச்சனை வைபவம் திருவருளால் சிறப்பான முறையில் நடந்தேறியது. இதன் நினைவாக ஆண்டுதோறும் மேமீத்தில் குருநாதருக்கு லக்ஷார்ச்சனை செய்து வருகிறோம்.

இங்ஙனம்,

'ஓவியமணி' தி. பா. சக்கரபாணி செட்டியார்,

தி. பா. ச. சாந்தகுமாரி.

# கோடி அர்ச்சனை செய்ய வாருங்கள்

[1—5—77 முதல், 16—5—77 வரை குருநாதர்க்கு நடந்த கோடி அர்ச்சனையின்போது பாடப்பெற்றது]

கோடி அர்ச்சனை செய்ய வாருங்கள்—குருநாத
ஸ்வாமிக்குக்
கோடி அர்ச்சனை செய்ய வாருங்கள்

கோடி சூரியர்களைப் போலொளிர்
கோமள ரூபனின் நாமங்களைச் சொல்லிக் (கோடி)

பாடிப் பாடித்தினம் உருகிடின்
பத்தர்கள் நல்லுளம் தித்திக்க அருளுவான் (கோடி)

நாடி நாடித்தவம் செய்திடின்
ஞானமும் மோனமும் நல்கியின் பூட்டுவான் (கோடி)

ஓடியோ டித்திரிந் துழல்மனம்
ஒடுக்கிப் பூசித்திடின் இடுக்கண் அகற்றுவான் (கோடி)

சட்டச்செந் நெறியினைத் தரணியில்
இட்டமாய்த் தந்தருள் சிட்டன் பெயர் சொல்லிக்
(கோடி)

திட்டம் செய்தே அடியார்களுக்(கு)
உட்டெளி வீந்தருள் ஓமுரு வாளர்க்குக் (கோடி)

கட்டம் அனைத்தையும் நீக்கிதற்
கருணை புரிந்து காப்பாற்றும் கோமானுக்குக் (கோடி)

துட்டர்கள் தம்மையும் நல்வழி
சூழப் புரிந்து திருத்தும் சீமானுக்குக் (கோடி)

காலம் கற்பனைகள் கடந்தொளிர்
கர்த்தன் ஒப்பில் ஞான சித்தன் பெயர் சொல்லிக் ()

சீலம் மிக்க அடியார்களின்
சிந்தையிற் கோயில் கொள் எந்தை பெயர் சொல்லிக் (கோடி)

கோலம் பலப்பல காட்டி நம்
குற்றம் மன்னித்தருள் கோன்திருப்பெயர் சொல்லிக்

ஞாலம் திருத்திட யாவரும்
நன்று திகழ்ந்து பேரின்ப நலம்பெறக் (கோடி)

காக்கக் கங்கணம் கட்டிக் கொண்டிந்தக்
காசினிக் குற்றநல் தேசிக மூர்த்திக்குக் (கோடி)

ஆக்கம் எல்லாம் நமக் கீந்தருள்
அற்புதன் விற்பனன் சிற்பரன் பெயர் சொல்லிக் ()

நோக்கம் உள் ளாக்கி மெய்யடியவர்
நுண்மை உணர்ந்திட உண்மை விளக்குவான் (கோடி)

மோக்கம் என்னும் பெருஞ் செல்வத்தை
மோக மிலார்க்கருள் ஏகசற் குருவுக்குக் (கோடி)

(வேறு)

அன்பும் நற்பண்பும் அடக்கமும் எய்திட
அழுக்கா றுசை அநீதி அகன்றிடக் (கோடி)

மன்பதை உய்ந்திட மாணறம் மல்கிட
மருளென உள்ளூறும் இருள் விலகிச் செலக் (கோடி)

துன்பங்கள் நீங்கிட ஜோதி துலங்கிட
சுமையெனும் வினையற அமைதி நிலாவிடக் (கோடி)

இன்பங்கள் யாவும் இகத்தில் நிலைத்திட
இறையடி சேர்ந்து பேரின்பமும் துய்த்திடக் (கோடி)

சென்னை மாநகரில் கொத்தவால் சாவடி
மன்னும் வாசவி பொன்னெடுங் கோயிலில் (கோடி)

இன்னருள் மிகும் சக்கர பாணியொ(டு)
இதமிகு சாந்த குமாரியொ டுற்றுக் (கோடி)

பன்னரும் புகழ் மிகு ராம லிங்கனார்
நன்னயத் தலைமையில் நன்று கலந்து (கோடி)

பொன்னும் நன் மணிகளும் புகழ்பொறை புனிதமும்
போதமும் பெற்றருட் பூரணம் எய்திடக் (கோடி)

பிள்ளையார் குப்பம் எனும் சித்தி மாநகர்
பிறங்கும் பேரருட் சக்தி அன்னைமுன் (கோடி)

கள்ளமில் லாத நல் வெள்ளை யுள்ளமும்
கதிபெற உதவருள் நிதியும் பெற்றோங்கிடக் (கோடி)

மெள்ள மெள்ள ஈர்த் தன்பர் குழாத்தினில்
மேவச் செய்தருளும் தேவன் திருவடியில் (கோடி)

உள்ள உள்ள உள்ளுருக்கி இன்பம் தரும்
ஒப்பிலி ரெட்டியப் பட்டி சுவாமிக்குக் (கோடி)



## மங்களம் 2

சற்குருவாம் நாதருக்கு ஜெயமங்களம்
சண்முகர் சகோதரர்க்கு சுபமங்களம்
சொற்களங்க மற்றவர்க்கு ஜெயமங்களம்
தூயசக்தி மைந்தருக்கு சுபமங்களம்

இரெட்டியப்பட்டி ஸ்வாமிகட்கு ஜெயமங்களம்
இபமுகக் கடவுளுக்கு சுபமங்களம்
அருட்சுக மளிப்ப்வர்க்கு ஜெயமங்களம்
ஐங்கரக் கணபதிக்கு சுபமங்களம்

அன்பமு தருள்பவர்க்கு ஜெயமங்களம்
ஆரணமு தல்வருக்கு சுபமங்களம்
இன்பொளி வழங்குவோர்க்கு ஜெயமங்களம்
எவ்வுயிர்க்கும் நாதருக்கு சுபமங்களம்

தத்வநிலை காட்டுவோர்க்கு ஜெயமங்களம்
சத்திய சொரூபருக்கு சுபமங்களம்
சத்வகுணம் நல்குவோர்க்கு ஜெயமங்களம்
சாந்தவடி வாளருக்கு சுபமங்களம் (சற்குரு)

---

திருக்கோயில் முகவரி:

**ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் திருக்கோயில்,**
**இரெட்டியப்பட்டி, நாகலாபுரம் அஞ்சல்-627904**
**திருநெல்வேலி மாவட்டம்.**

---

துரை அச்சகம், காஞ்சிபுரம்.




1—5—77 முதல், 16—5—77 வரை நடைபெற்ற
ஸ்ரீரெட்டியப்பட்டி சுவாமிகள் கோடி அர்ச்சனை விழாவில்,
பிள்ளையார்குப்பம்
**ஸ்ரீலஸ்ரீ அருட்சக்தி அன்னை** அவர்கள்
கலந்துகொண்டு அருளுரை ஆற்றுதல்.



கோடி அர்ச்சனை பூர்த்தியானபின்,
ஸ்ரீ குருநாதர் முதலிய திருவுருவப் படங்களை
திரு. தி. பா. சக்கரபாணி செட்டியார்,
அவர்கள், மயிலையிலுள்ள தம் இல்லத்திற்குக்
கொண்டுசெல்லுதல்.

"உனக்கே பொறுப்பல்லாது, எனக்கினிச் சுமையேது" என்ற பற்றற்ற மன நிலையைப் பெறுதலே ஜீவாத்ம ஐக்கிய மாகும்.

* * *

இவ்வுலகில் உள்ள அனைத்துப்பொருள்களும் உன்னிடம் வந்தாலும், ஒன்றுமே யற்றவறுமை நிலை வந்தாலும், தளர்ந்து விடாதே.

நீரில் சேற்றில் வாழும் மீன், தன் உடலில் எதையும் ஒட்டிக்கொள்ளாமல் வாழ்வது போல உன்மனம் உலக வாழ்வில் ஈடுபடட்டும்.

இயன்ற அளவு இயற்கையைக் கண்டு, அதனுள் படிந்து இணைந்து வாழக் கற்றுக் கொள். எத்தனையோ அருட்பாடங்களை அது உனக்கு உணர்த்தும்.

# SRI ARULSAKTHI ANNAI SCHOOL OF ARTS & CRAFTS

No. 8, Kennady Second Street, Mylapore
MADRAS-600004.
Phone No. 75276

## COURSE CONDUCTED

1. FREE HAND OUTLINE & MODEL DRAWING (L,H)
2. DESIGN (L,H)
3. PAINTING (L,H)
4. GEOMETRICAL DRAWING (L,H)
5. HOBBIES

( L - LOWER, H - HIGHER )

Principal: **T. B. CHAKRAPANI**